"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.


புத்தகம் 14.] 1905-ம்ஸு அக்டோபர்மீ. [சஞ்சிகை 6.


SRI VIDYA OR THE HOLY SCIENCE OF

# "CHARACTER-BUILDING."

## III. The Gospel of Love and Service.

### SCHILLER'S HYMN TO JOY.

Joy divine, fair flame immortal
Daughter of Elysium
Mad with rapture, to the portal
Of thy holy fane we come!
Fashion's laws, indeed, may sever,
But thy magic joins again;
All mankind are brethren ever
'Neath thy mild and gentle reign.

*Chorus.*

Welcome, all ye myriad creatures!
Brethren take the kiss of love!
Yes, the starry realm above
Smile a father's kindly features!

Joy in Nature's wide dominion,
Mainspring of the whole is found;
And 'tis joy that moves the pinion,
When the wheel of time goes round;
From the bud she lures the flower—
Suns from out their orbs of light;
Distant spheres obey her power,
Far beyond all mortal sight.

*Chorus.*

As through Heaven's expanse so glorious
In their orbits suns roll on,
Brethren thus your proud race run,
Glad as warriors all-victorious!

"My brave boys,—Nothimg else is necessary but these—*Love*, *Sincerity* and *Patience*. What is life but growth, i. e., *love*. Therefore all love is life, it is the only law of life; all selfishness is *death*; and this is true here or hereafter. It is life to do good, it is death not to do good to others. Ninety per cent. of human brutes you see are dead, *ghosts*, for none lives, my boys, but who loves. Feel

my children, feel, feel for the poor, the ignorant, the down-trodden, feel till the heart stops and the brain reels and you think you will go mad, then pour the soul out at the feet of the Lord and then will come power and help, indomitable energy. Struggle, struggle was my motto last ten years. Struggle still say I. When it was all dark I used to say struggle; when light is breaking in, I still say, struggle. Be not afraid my children. Look not up in that attitude of fear towards that infinite starry vault as if it will crush you. Wait, in a few hours more the whole of it will be under your feet. Wait, money does not pay nor name, fame does not pay nor learning. It is love that pays, it is character that cleaves its ways through adamantine walls of difficulties." — *Epistle of Swami Vivekananda.*

"We have got each to be a real Christ or the world will never be saved. Only Christ can save the world. And what was the Christ? Absolute identity with God, real unity with man. Are we united with man? A whole gulf cuts us off from all but a few of our fellow-creatures. Yet we are one with them.........that is, we ought to be. And until we are, we are not a Christ. As long as any supposed goodness or rank or ability interrupts the freest possible form of sympathy born of consciousness of complete identity with the weakest and meanest of our kind, we are out of Christ, even out of his humanity. And mayhap there are many out of Christ on that side as out of Christ on the side of his identity with God."—Extract from an old pamphlet quoted in Stead's Annual "*Here am I: Send me.*"

"He doeth much that doeth a thing well. He doeth more that serveth others in the doing. He doeth most that loveth most 'the God that made and loveth all'."

"Wouldst thou here be like a deity,
In the realm of death be free,
Never seek to pluck its garden's fruit."—*Schiller.*

# "மதிவளர்வித்தை," அல்லது ஸ்ரீவித்தை.

## III. "அன்பே தெய்வம், அருளேசக்தி!—இன்பே பணியும், இருளும் போமே!"

"அருளினாலன்றி யொராக்கமுமில்லையால்
மருளினால் நானெனச் செய்வதொன்றில்லை
தெருளினாலுள்ளந் தெளிந்திடச்செய்யுமுன்
னருளினாலன்றி யாவதொன்றில்லையே."—பிரார்த்தனைப்பத்து,
ஆனந்தத்தாய்மொழி.

சென்ற சஞ்சிகையில் 'அஹம்விருத்தி, பரசேவை' முதிர்ச்சியால், ததாகாரமாகிய பூரணஸ்வரூபமும், சின்மாத்திரமாகிய சித்விலாசமும் இன்னதென்று உள்ளபடியறிய நேரிடுமென்று சொன்னோம். இது பெற்றோர்கள் பிரதமாசிரியர்கள், குழந்தைகள் மனதை இனமறிந்து குணப்படுத்தச் சாதகமாகக் கூறியது. இப்படி பால்யப்பழக்கத்தால் ஸத்குணஸம்பத்து (Formation of good character) ப்பெற்ற இளைஞர் இனிநடந்துகொள்ள வேண்டியதைப்பற்றிச் சிறிது கூறுவோம். இந்த வேதாந்த சித்தாந்தமெல்லாம் வாலிபர் மனதிலேறுமாவென்று முதலெடுப்பில் ஒரு கேள்விபிறக்கலாம்; இதற்கு பதில் சொல்லிவிட்டு மேலே யெழுதுவோம். நாம் கூறியபடி பால்யப்பழக்கம் பெற்று வளர்ந்த இளைஞர்மனம் துல்லியமாய் சுபவாசனைகள் நிறைந்து நல்லுபதேசம் பெற நயம்மிகச்சேர்ந்ததாய் விளங்கும். குடும்பத்திலடிபட்டவர்களுக்கு உலகவாசனைபடிந்து மனம் அழுக்கு நிறைந்திருக்கும். நல்லுபதேசங்கள் என்னசொல்லினும் அவை அவ்வழுக்குப்படிந்த மனதில் ஒட்டாதுபோகும். ஸ்ரீராமலெக்ஷ்மணர்களை விசுவாமித்திரர் குழந்தைப்பருவத்திலே தகப்பனைவிட்டுப் பிரித்தழைத்துக்கொண்டுபோய்விட்டார். ஸ்ரீவசிஷ்டபகவான் இராமருக்கு ஞானோபதேசம்செய்த

போது அவருக்கு வயது பதினைந்தே. ஆகையால் வளர்பிராயத்திலேயே குணமும் மணமும் அமைந்தால் அமைந்ததேயன்றி முதிர்வயதில் மனதைத் திருத்துவது அவ்வளவு லேசான காரியமில்லை. உலகநெறிபற்றிச் சென்று "தான் கண்டதே காக்ஷி கொண்டதே கோலம்" என்று குதூஹலமாயிருந்தவர்கள் சிலவ்ருஷங்கள் சென்றபின் "துள்ளினமாடு பொதி சுமக்கும்" என்பதை அனுபவத்திற்கண்டு, "ஐயோ! இளம்பிராயத்தில் நம்மனதைத் திருத்தி நல்வழிகாட்டுவாரில்லாமற்போய், இப்படி அவதிப்படலாயிற்றே!" யென்று வருந்தியிருக்கிறார்கள். இதை யெழுதுபவர் தான் தலையெடுத்தகாலத்தில் ஒரு பெரியவர் உண்மையுபதேசம்செய்ததை புன்ணுமற்போகப் பதினைந்துவருஷம் அரும்பாடு பெரும்பாடுபட்டுழைத்து உடல்பொருளாவியு மொருங்கே கரைந்தபோது, "ஓஹோ! உலகமே தலைகவிழ்ந்திருக்கிறது போலிருக்கிறதென்று நினைத்து உண்மையை யுணர உளங்கரைந்தழுதப்பால் உளவுகிடைத்தபின், ஐயோ இதை முன்னமே விசாரித்துணராமற் போனேனே!" யென்று வருந்தியழுததை இப்பவும் நினைக்கில் உடல் கூசுகிறது. ஆதலால் இகபரமிரண்டிற்கும் சாதகமான வழியையே யிங்கு சொல்கிறோம். இகம் பரமென்றிரண்டு பங்குபோட்டு எங்கும் வைக்கப்படவில்லை. இகத்தில் நல்வழிபற்றி யுழைத்தால் அது பரத்திற்கும் சாதகமாம். பரத்திற்குழைத்தால் அது இகத்துக்குமனுகூலமாம். இந்த இரண்டுவழியையும் ஒன்றென்றுகாட்டி யுழைத்த தீரர்களில் ஸ்வாமி விவேகாநந்தரைப்போலுந் தீரர் இக்காலத்தில் வேறுயாருமில்லை. உலக மறியவுழைத்துஎல்லாருக்குமோர் நல்லுதாரணமாயிருந்து காட்டியதால் அவரை திருஷ்டாந்தமாக வெடுத்துக் காட்டினோம். தாஷ்டாந்தமாகப் பார்க்கில் எத்தனையோ மகான்களிருக்கிறார்கள். ஸ்ரீ விவேகநந்தர் குருவாம் ஸ்ரீ இராமகிருஷ்ண தேவரே யிதற்கு முக்கிய தாஷ்டாந்தமாம். நம்முடைய மஹான்களின் உண்மையை யறிய நம்மவர் நுட்பபுத்தியற்று நாஸ்திகபுத்தியால் கண் பஞ்சடைந்து கிடக்கிறார்கள். ஸ்வாமி விவேகாநந்தருடைய மேன்மையும் மேற்றிசையாருடைய நன்கு மதிப்பால் உலகப்பிரசித்தமாயிற்று. ஆகையால் அவருடைய வார்த்தைகள் நம் வாலிபர்களால் மிகவும் பக்திசிரத்தையோடும் கேட்டு மனதில்வைத்து நடத்தையில் அனுஷ்டித்துவரத் தக்கவைகளாம். அவர் தம் வழிபற்றிய நம்மவருட் சிறந்த வாலிபர்களுக்குச் செய்ததோருபதேசமாம் உறுதிபயக்கும் வாக்கியங்கள் நிறைந்த கடிதமொன்றை இதற்கு மேற்கோளாக வெடுத்தாண்டிருக்கிறோம்.

அவருடைய உபதேசம் சுருதிவாக்காகக் கொள்ளத்தக்கது. அதில் அருளும் தெருளும் அவ்வளவு நிறைந்திருக்கிறது. "அஹம்விருத்தி, பரசேவை" யிரண்டும் படியப்பெற்ற வாலிபோத்தமர்களுக்கு "ததாகார-சின்மாத்திரநிலை" தானே காலக்கிரமத்தில் சித்திக்கும். அதற்காக அவர்கள் வீடுவாசலைவிட்டுக் காடுசென்று தேடியலையவேண்டியதில்லை. ஜீவனமார்க்கத்தைவிட்டு பாவனமார்க்கத்தில் சென்று கோழிக்கனு கண்டுகொண்டு திண்டாடவேண்டியதில்லை. தொழிலைவிட்டு ஒழிவுதேடித்துறவுபூண வேண்டியதில்லை. காடுவனங்களில் சென்றுறைவதும் நாடு நகரங்களைவிட்டொழிவதும் மனதையடக்கி வழிக்குக் கொண்டுவந்து, அது நம்மைபாட்டுவதுபோய், நாம் அதை ஆட்டினால் ஆடவும் நிறுத்தினால் நிற்கவும் பழக்கவேண்டியன்றி வேறொன்றுக்குமில்லை. கரடி புலிகளையுமடக்கியாளலாம், ஐந்துலோகங்களையும் பொன்னாக்கி வித்துச் சீவனம் செய்யலாம்; நீர்மேல் நடக்கலாம்; ஆகாசமார்க்கத்தில் சென்று சித்தர்களோடுங்கூடிச் சஞ்சரிக்கலாம்;—ஆனால் இமைப்பொழுது

இந்த மனதை நிறுத்திப்பார்க்கவேண்டுமென்றால், அப்பப்பா! அது மகாகஷ்டமாயிருக்கிறதென்று தாயுமானவர் சொல்லியிருக்கிறார். "மனமிறக்கக் கல்லாதார்க்கு வாயேன் பராபரமே!" என்றும் பாடியிருக்கிறார். ஆகையால் இந்த ஜகமுண்டானதும் இந்த ஜகத்தில் ஜகமாய் நாம் தோன்றியதும் "தநு கரண புவன போகாதி" சாதனங்களைக் கொண்டு மனதை யடக்கியாண்டு ஜீவதத்துவத்தை விட்டு ஈசுவர தத்துவமடைந்து அதையும் விட்டு "அப்பாலுக்கப்பாலாயுள்ள" அத்துவித நிலையை யறிந்தனுபவிக்கவே யன்றி வேறொன்றுக்குமில்லை.

"உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண்"—

என்று ஔவைகுறளில் கூறியிருப்பது சத்தியம். "The *summum bonum* of Human Existence" என்று சொல்வது இதுவே. மானுடப்பிறவி யெடுத்ததின் ஜன்ம சாபல்யம் பிரம்மானந்தமுற்று அத்துவிதவுண்மையை அறிந்தனுபவிப்பதேயாம். இந்த முடிவு யாருக்கு சித்திக்கவில்லையோ அவர்கள் ஜனனமரண சக்கரத்திலகப்பட்டுழன்று வரவேண்டியதுதான். 'இதெல்லாமுண்மைதான்! இதற்கு வழியென்ன? என்ன செய்யவேண்டியதென்றால்' கேளுங்கள்:—

ஸத்குண சம்பன்னதீரர்காள்! இவ்வுலகிலும் எவ்வுலகிலும் இன்றியமையாதனவாய் வேண்டியது மூன்றே! அவை:—அன்பு, உண்மைக்குணம், பொறுமை அல்லது சாந்தம். உயிர் என்றால் என்ன? அன்புருவேயன்றி வேறல்ல! ஆகையால் அன்புடைமையே உயிர் வாழ்க்கை; அகம்பாவமே மரணம். இகம் பரமிரண்டிற்குமிது உண்மையே. பரோபகாரமே பரம புருஷார்த்தம். அவ்வுபகாரம் செய்யாமையே நல்குரவும் நமன் வரவுமாம். பையல்காள்! நீர் காணும் மனிதர்களில் 100-ல் 90பேர் மானுடரூப மெடுத்த மிருகங்களென்பதற் கையமில்லை! ஏனெனில் அன்பிலா மாந்தர் அறன்வாய்க் கிரையாம் நடைப்பிணமாவர். குழந்தைகாள்! ஏழைகட்கிரங்குமின்; அறியார்க்கனுதாபமும், துன்புற்றார்க்குத் துக்கமும் கொண்டுணர்மின்! பிறர்துக்கம் சகியாப்புண்ணியனே புனிதன். ஆகையால் அகம்பாவத்தை விட்டு பரசேவையில் எல்லார் துயரையும் உங்களதாகக்கொண்டு கரைந்துருகுமின்! உணர்மின் உணர்மின்! உள்ளங்கரைமின்! கண்ணீர் விட்டுக் கதறியழுமின்! ஹிருதயம் துடித்துத் திடுக்கிடுமளவும், எண்ணமெழுந்து கண்ணைச்சுழற்றித் தலைமயக்கங்காணுமட்டும் ஏழைகட்கிரங்குமின்! பித்தன் பேயன் போலாகும் வரையிற் பரிதபித்துழையுமின்! மேல் பொறுக்கக்கூடாது உயிர் தாங்காத்தன்மையில் "ஐயனே! அப்பனே! யென்றலறிக்குளறி அன்பே யுருவாய் நின்று 'எல்லா முன்னடிமை எல்லா முன்னுடைமை' யென்று தலைதாங்காப் பாரமத்தனையும் ஈசன்மேல் போட்டு அவன் தாள் பற்றுமின்."

"ஈசா போற்றி யென்னிறைவா போற்றி
மாசிலாமணியே மரகதவொளியே போற்றி
வசிலாமொழியா லிரந்தார்க்கருள் நேசா போற்றி
ஆசிகூர்! அண்ணலே வாசியென் றுன்தாள் பற்றினேன் போற்றி!"

என்று ஆடிப்பாடியபரற்றி உடல் பொருளாவியையும் அவன் பாதத்தில் சமர்ப்பித்து "ஜய விஜயீபவ! அபயம்! அபயம்!!" என்று ஈசன்பால் உள்ளன்பு நிறைந்த உண்மைப் பக்தி வைத்து "ஈசா உன்பணி செய்யச் சக்தியளித்தருள்!" என்று பிரார்த்தித்தால் அப்பொழுது உங்களுக்கு நீங்களறியாத ஒருவித அபார சக்தியும், உதவியும், அஞ்சாநெஞ்சும், அழியாத் தீரமு முண்டாகக் காண்பீர். "எல்லாமிருளா யிருந்தக்கால் விடேன் தோடேனென்றுழைத்து வந்தேன்! கஷ்டங்களெல்லாம் விடிந்தகாலத்தும் விடேன் தொடேனென்றின்னு முழைக்கிறேன்!" என்று விவேகாநந்தர் தம் அனுபவத்தைச் சொல்கிறார். உத்தம புருஷர்களுக்குச் சொல்லொன்று செய்கையொன்றென்கிற பேதமில்லை. மஹாகணபதியின் துதிக்கையில் மூக்கும் கையும் ஒன்றாயிருந்து விளங்குவதுபோல் வாயும் கையும் அவர்களுக்கொன்றாயிருந்து வேலைசெய்யும். ஆகையால் மேலோர் "நான் சொன்னேன்! சொல்கிறேன்!" என்றால் "செய்தேன், செய்கிறேன்" என்பதையும் தருவித்துப் பொருள் செய்து கொள்ளவேண்டும். ஆ! வானத்தைப் பார்த்துப் பயப்படுகிறீர்கள்! ஐயோ! எண்சாணுடம்பும் ஒருசாணுக்குறுகி யொடுங்கி நிற்பதேன்! "அஞ்சாதே! அஞ்சாதே!" யென்றபயக் குரல் காதில் விழுந்துகொண்டிருக்கையில் ஏன் இப்படி நடுங்குகிறீர்கள்! ஆ! பாலர்காள் அப்படி நடுங்காதேயுங்கள்! ஏன் பயப்படுகிறீர்கள்!

"வானத்தைப் பார்த்திட்டான்
மயிர்க்குச் செடுக்க நின்றான்
மூஞ்சியைச் சுளுக்கிக்கொண்டான்
மூதேவி போலானான்;
ஏனென்று கேட்டார்க்கவன் சொன்னதை நானென்ன சொல்வேன்!
வானுக்குக் காலிலதால்
வானிழிந்து விழுந்தக்கால்
என் செய்வேனென்று ஏங்கிப் புலம்பலுற்றான்.
அவன் புலம்பினதைப் பார்த்துப் பலரும் நகைத்தார்கள்.
நகைத்த உதாரணத்தை நன்கெடுத்துப் போதித்தாள்
மாயையென்ப தின்னவென்று மயக்கமறச் செப்பி நின்றாள்
உள்ளபடி விசாரித்தால் உளதெல்லாம் போமென்றாள்.
நீயுமில்லை நானுமில்லை நமனுந்தானில்லையென்றாள்
ஒன்றுமில்லையென்றாள்—வெட்ட வெளியென்றாள்;
† அகண்டாகாரமென்றாள், ஆனந்தஸ்வரூபமென்றாள்;
என்றுமழியாதென்றாள் எங்கெங்குமுளதென்றாள்;
ஏதுமுணராமல் நானேங்கித்தயங்கினேனே!"—ஆனந்தத்தாய்மொழி.

"ஏனிந்த ஏக்கம்! ஏனிந்த அச்சம்! குழந்தைகாள்! வானமிடிந்து தலையில் விழும்போல் அப்படியஞ்சி நில்லாதேயுங்கள். இந்த ஜகம் இப்படி பிரம்மாண்டமாயிருக்கிறதே யென்று

† Comp. "Is not Truth *One* and indivisible?
Take from the Harmony a single tone—
A single take from the Iris bow,
And lo! what once was all, is nothing—while
Fails to the lovely whole one tint or tone!"—*Schiller.*

பயப்படுகிறீர்களா? அப்படியல்லீ அது! எல்லாம் வெறுந்தோற்றம்: இப்பொழுது அப்படித்தான் தோன்றும்! அன்புவிதையூன்றி அது முளைத்துத் தளிர்த்துக் கப்புங்களையுமாய்ச் செழித்து வளர்ந்திருக்கையில் உங்களுக்கேனிப்பயம்! சற்றுப்பொறுங்கள்! உலகெல்லாம் உங்கள் பாதத்தின்கீழ் வந்தமையும்!"

"பூக்கும் பருவமென்றுள் பிஞ்சுவிடுங்காலமென்றுள்
அல்லும் பகலும் அன்பான நீர்வார்த்து
ஆதரவுசெய்து அருமையாய் வளர்த்து வந்தால்
இன்பக் கனியீனு மிதுநிச்சயம் நிச்சயமென்றுள்!"

* * *

"கருணைஜலம் பாயப் பேரின்பமரம் பூத்ததுகாண்
பூத்ததுகாண் கருணையதால் பிஞ்சுவிடு மினியதுவாய்
பிஞ்சு விட்டால் காயாகும் காய்முத்திப் பழமாகும்
பேரின்பப் பழம் பழுத்தால் தானேயது நழுவிவிழும்
நழுவிவிழும் பழமதனை நாமேந்தித் தின்னிடலாம்
தின்னத் தெவிட்டாது தேன்மயக்கம் வாராது
எப்போது மின்பரச மன்பாக வாயிலூறும்."

"அன்பை யறியீரோ அழிவற்ற மாந்தர்களே
இன்பசுகமறியீரோ இல்லறக்கிழவர்களே
நீங்களறிந்து மறியவில்லை யிருந்துமில்லை யென்றிருக்கீர்;
இல்லாதை யிருக்கென் றிறுமாந்து நீரலைவீர்
இருப்பதை யில்லையென் றேமாந் திரங்கி நிற்பீர்;
உள்ளதை யுள்ளபடி யுளவறிந்து கண்டு கொண்டால்
உங்களினும் மேலானோர் எங்குண்டு சொல்வீரே."—ஆனந்தத்தாய்மொழி.

உண்மையிருப்பது உள்ளபடி இப்படி யென்றால் ஏன் உங்களுக்கு வீண்மயக்கம்! வீண் அச்சம்! வீண் லஜ்ஜை! பயப்படாதீர்கள்! மயங்காதீர்கள்! லஜ்ஜையை விட்டுக் கச்சை கட்டிக்கொண்டு அன்பே தெய்வமென்றுருக் குழையுங்கள். பரசேவை செய்யுங்கள்! உண்மையை உன்னி யுணருங்கள்! அன்பிலே பிறந்து அருளிலே வளர்ந்து இன்பிலே யுழைத்து இருளையும் போக்கிக்கொண்டால் துன்பெலாம் நீங்கித் துயரெலாமொழிந்து வன்பெலாம் விட்டு வாயுமன மொடுங்கி இன்பெலா முருவாயிசைந்ததோர்†மாதை அன்பிலே கலந்து அன்பதுவேயாகிய ஆனந்தநிலையில் இகபரமிரண்டையும் அகம்புறமாகவே யறிந்து விளங்கலாம். இந்த அனுபவம் இன்னும் உங்களுக்கு சித்திக்கவில்லையே யென்கிறீர்களோ! "சித்தித்திருக்கு! சித்திக்கும்!" "அன்பே தெய்வம், அருளே சக்தி!—இன்பே பணியும், இருளும் போமே!" என்பதை மனத்திலிருத்தி "ஊக்கமது கைவிடேல்" என்றுழையுங்கள். உழைத்து வந்த அனுபவத்தில் "முயற்சி திருவினையாக்கும்" என்பதின் உண்மையை உள்ளபடி யுணர்ந்தானந்திப்பீர்கள். "அன்பே கதி, அன்பே விதி, அன்பே வழி" யென்றுழைத்து கர்மபலத்தியாகஞ் செய்து வந்தால் "இன்பே பணியும்" என்பதின் இரக

† Comp: "அறிவார் பராசக்தி யானந்தமென்பார்." Also, "அன்புருவே இன்பமடி இன்பமதுமன்புருவே." Again:—"Beauty is truth, truth beauty—that is all
Ye know on earth, and all ye need to know."—*Keats.*

சியம் தெரியவரும். உழைப்பெல்லாம் உண்மையில் இன்பேயன்றி வேறல்ல. உழைக்கத் தெரியாமலுழைத்தால் உழைப்பும் துன்பமாம். கருமசந்நியாச யோகத்தினுண்மைப்படிந் துழைத்தால் "உழைப்பு" எல்லாவிதத்திலும் "பிழைப்பை"த்தரும். எதற்கும் அப்பியாச பலம் வேண்டும். அப்பியாச பலத்தால் தான் அநுபவம் சித்திக்கவேண்டும். அந்த ஸ்வானு பவம் சித்திப்பது மகா அருமையானாலும் பக்தியால் நைந்துருகிய அன்பர்க்கு கருமசந்நி யாச யோகத்தால் அது எளிதில் சித்திக்கும். "கரும சந்நியாசம்" என்றால் கருமத்தை அன்பு காரணமாய்ச் செய்து கருமபலனை ஹிருதயபூர்வகமாக ஈசுவரார்ப்பணம் செய்கிற தாம். "அவசரப்பட்டாவ தொன்றில்லையால்" பொறுமின்! பொறுமின்! பொறுமையா யிருந்து சாந்தோபசாந்தத்தை மேற்கொண்டுழைமின்! பேய் பிடித்த உலகம் பணம் பண மென்று பணப்பேய் பிடித்தலைகிறது! கோடிக்கணக்காய் பணம் சேர்த்தவர்களெல்லாம் கோடீசுவரன் என்கிறபேரால் வருவது துன்பமேயன்றி அதில் இன்பமொன்றுமில்லை யென் கிறார்கள். உன்னிப்பாருங்கள்! பணத்தாலொன்றுமாவதில்லை! பேராலொன்றுமாவதில்லை! கல்வியாலும் (கற்றபடி நில்லாவிடில்) ஒன்றுமாவதில்லை! "அன்பொன்றுண்டானால் ஆகாத தொன்றில்லை!" அந்த அன்பில் பழகிவந்த குணம் ஒன்றே இடிமின்னலுக்குமஞ்சாது வச் சிரக்கோட்டையையும் வச்சிராயுதத்தையும் பொடியத்துண்டித்து நினைத்தகர்ம முடிக்கவல்ல தாம். இதை சங்கற்பசித்தி யென்றும் ஈசத்துவம் என்றும் சொல்லுவர். "நினைத்தது முடித் தல்" ஆகிய ஆற்றல் யாரிடத்திலிருக்கிறதோ அவனே ஈசன். அந்த ஆற்றல் அன்பொன் றாலே யாகத்தக்கதாதலால் "அன்புடையார் எல்லாமுடையார்." இந்த உண்மையை அநு பவ பூர்வமாயறிந்தே பாண்டிய நாட்டிற்குப் பதினாறு வயசிலே மந்திரியாகவரும் பாக்கியம் பெற்ற திருவாதவூரர், கல்வி, செல்வம், பேர், கீர்த்தி யெல்லாம் 'ஆகாததென்றுகண்டு' விலக்கி அன்பொன்றே வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார்:—

"உற்றாரை யான் வேண்டேன், ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்,
கற்றாரை யான் வேண்டேன், கற்பனவும் இனி அமையும்,
குற்றாலத்தமர்ந்துறையுங் கூத்தா! உன் குரைகழற்கே
கற்றாவின்மனம்போலக்கசிந்துருக வேண்டுவனே!"—திருவாசகம்.

இந்த அன்புவிருதம் பூண்டுழைத்து அநுபவமும் சித்தித்தால், சித்தித்த அநு பவத்தைச் சாதித்து சகஜத்துக்குக் கொண்டு வரவேண்டும். என் தாயின் உபதேசமிது:—

"அநுபவம் சித்தித்தால் அப்புறமே யொன்றுமில்லை;
ஒன்றுமில்லை யானாலும் ஆனந்தக்கொழுப்பேறும்;
கொழுப்பேறி யடங்கி விட்டால்
மத்தித்திருந்திடலாம்.
மத்தித்திருப்பதுவே மஹாதீத நிலையம்மா.
மத்தித்திருக்கு மிந்த மஹாதீத நிலை யெனக்கு
எப்போது சித்திக்குமென்றென் மாதாவை நான் கேட்டேன்.

❀

"மோக மடங்கவேணும் மெய்யுருவங்காணவேணும்
மெய்யுருவங்கண்டு அன்பு நிலையறிய வேண்டும்

அன்பு நிலையறிந்து அந்தரங்கமாக வேண்டும்
அந்தரங்கமாய்விட்டால் அனுபவமே சித்திக்கும்;
சித்திக்கும் மெய் சொன்னேன் சித்தங்கலங்காதே யென்றாள்."—

"சித்தந்தானழிந்ததுவே யதைப்பற்றியேன் விசாரம்?"
என்று நானறைந்ததற்கு என் தாயார் என் சொன்னாள்:
புன்சிரிப்புத் தவழுமவள் இன்பமுகமலர
"போகப்போகப் பொன்னம்பலமாம்" என்றாள்.

ஓம்தத்ஸத். ஸத்குருவேநம:

## SELECTION FROM SCHILLER'S POETRY.
## DIVISION OF THE EARTH.
# கடவுள் உலகைப் பங்கிட்டுக் கொடுத்தது.

[ஆதியில் முழுமுதற் கடவுள் மனிதர்களைநோக்கி. "இவ்வுலகத்தை உங்களுக்குரிமையாகக் கொடுக்கின்றேன், அவரவர்க்கு வேண்டியபடிப் பங்கிட்டுக் கொள்ளுங்கள்" என்றனர். உடனே எல்லாரும் எனக்கு எனக்கு என்று ஆவலோடு வந்து தங்கள் தங்களுக்கு வேண்டிய வற்றைப் பெற்றுக்கொண்டனர். வேளாளன் விளை நிலத்தைக் கொண்டனன்; வேடன் வனத்தைகொண்டு வனவிலங்குகளை வேட்டையாடினன். வர்த்தகன் வாணிபத்துக்குரிய பொருள்களைக் கவர்ந்து பண்டகசாலைகளிற் பூட்டிவைத்தனன். அரசன் வழிதோறும் காவல் வைத்து வரிகளும் சுங்கங்களும் வாங்கிக்கொண்டனன். இவ்வாறு பலரும் பலபொருள்களையும் உரிமையாகக்கொண்டபின் புலவன் இரைக்க இரைக்க ஓடிவந்து பார்க்க அந்தோ! தான் சமயத்துக்கு வாராமல் தாமசித்ததனால் பொருள்கள் யாவையும் பலரும் பெற்றுக்கொண்டு தனக்குப் பெறக்கூடியதொன்றும் இல்லாமையைக் கண்டு, கடவுளை நோக்கி "எந்தாய்! நின்மக்கள் யாவர்க்கும் அவரவர்க்கு வேண்டிய பொருள்களை யீந்து யாவரினும் சிறந்த நின் ஜ்யேஷ்ட புத்திரன்போன்ற எனக்கு ஒன்றுமில்லாமற் செய்வது தர்மமா?" என்று முறையிட்டனன். அதுகேட்டுக் கடவுள், "நானென்ன செய்வேன்! நீ சமயத்துக்கு வாராமல் எங்கேயோ தூங்கிவிட்டு இப்போது வந்து என்னைக் குறைகூறுவதாற் பயனென்ன?" என்றனர். அதற்குப் புலவன், "பெருமானே! நான் எங்கும் புறஞ்சென்றிலேன். உமது சந்நிதியில் நின்று உமது திருமேனியைத் தரிசித்து உமது புகழாகிய திவ்ய கானங்களைக் கேட்டுக்கொண்டு பரவசப்பட்டிருந்தேன்" என்றனன். அதுகேட்டுக் கடவுள் ஆனந்தித்து, "அன்ப, என்செய்வேன்! உலகில் உள்ள பதார்த்தங்களை யெல்லாம் ஒன்றொழியாமல் அவரவர்க்குக் கொடுத்து விட்டேன். இனிக் கொடுக்கற்பாலதொன்றுமில்லை! ஆயினும் ஒன்று சொல்லுவன் கேள். உனக்கு என்னோடும் பொன்னுலகில் இருக்க எண்ணமுண்டானால் வருக! நீ யெப்பொழுது வரினும் அவ்வுலகம் உனக்கு வழிதிறந்து காட்டும்', என்றனர். அதைக்கேட்ட புலவன் 'இங்கற்றோர்க்கங்குண்டு' என்கிறபடி தனக்குப் பொன்னுலகுதந்த ஈசனை 'ஏழைபங்காளி' யென்று துதித்துப் போற்றிச் சுகமாயிருந்தனன்.]

## நேரிசை வெண்பா.

1. மைந்தருக்குத் தந்தை—வழங்குதல்போல் வண்புவியைச்
சொந்தமுறத் தந்தேனீர் சோதரர்போற்—சிந்தைக்
கலக்கமறக் கொண்டிடுவீர் காதலா லென்றான்
தலைக்கடவுள் தண்ணருளாற் றான்.

2. ஆவலோ டியாரு மவரவர்க்குத் தக்கபடிக்
கூவியருள் திண்புவியைக் கொண்டனரால்—வாவிகள்சூழ்
தண்மருதம் சார்ந்திருந்தான் வேளாளன் தான்வேடன்
உண்மகிழ்ந்தான் கானனத்தை யுற்று.

3. வணிகன் தனக்குரிய வெண்பொருளைக் கொண்டு
திணியஅறை தோறும் செறித்தான்—மணிமுடிவேய்
வேந்தனவன் எவ்வழியும் மேவுமவ ரைத்தடுத்துப்
போந்திடுசுங் கங்கொண்டான் புக்கு.

4. இவ்வகையி னெல்லோரும் எப்பொருளுங் கொண்டதற்பின்
அவ்வழியே யோடி யணைந்திட்டான்—செவ்விப்
புலவனவ னந்தோபின் புக்கதுகண் டொன்றிங்
கிலையோ எனக்கென்றா னெய்ந்து.

5. எந்தையே நின்மக்கள் யாவரினும் மெய்யான
மைந்தன்யா னேதும் மருவாமல்—சிந்தை
தளர்ந்திடுதல் நீதியோ என்றுதாள் வீழ்ந்தான்
உளம்புரிவான் உத்தமனும் உற்று.

6. இத்தனைப்போழ் தெங்கிருந்தாய் ஏழாய்நீ எவ்விடத்துப்
புத்திகெட வேயுறங்கிப் போயினையென்—றத்தன்
புகன்றிடலும் ஐயநின் புண்ணியத்தாள் பற்றி
அகன்றிலனே யென்றா னவன்.

7. தேசாரும் நின்றன் திருமுகத்தைக் கண்டிருந்து
பாசம் கழன்றோர்வின் பாடல்கேட்—டாசை
ஒழிந்துனது சந்நிதிக்கண் உற்றிருந்தேன் ஐய
இழந்தனன்மற் றென்னுரிமை யீங்கு.

8. என்றதுகேட் டீசன் இசைப்பான் எனக்கினியாய்
குன்றலிலா தியாவுங் கொடுத்திட்டேன்—ஒன்றுகேள்
என்னோடு வானத் திருத்தியெனி லெய்திடுவாய்
நன்னர் வழிதிறக்கும் நாடு.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

('ஷில்லர்' என்னும் தத்துவஞானியும் மஹாகவியும் செய்த இவ்வெட்டுப் பாவையும் நம்பின்னிருந்து படித்த பரதேசி யொருவர் "தொட்டுக்காட்டும் வித்தையீதென்" றப்பாலேயிப்பாவொன்றுணர்தியெனச் சொல்லிப் பொட்டென மறைந்தார். அதை நாம் கேட்டது கேட்டபடி கீழே வரைகிறோம்.)

"உலகெலா முணர்ந் தோதற் கரியவெந்தாய்
உலகிலா மைந்தனேற் குன்பொன் னுலகுதந்தாய்
சகமெலா மினியெனக்குச் சாக்ரசொப் பனமேயாகும்
யுகமெலாம் பழிக்குமுன்னை யேழைபங் காளியென்றே."

## Indian Folksongs of Truth and Wisdom.

# THE PILGRIM SOUL ON IT'S WAY TO THE GOAL.

# காசியாத்திரை.

"உள்ளத்தினுள்ளேயுளபலதீர்த்தங்கள்
மெள்ளக்குடைந்துநின்றாடார்வினைகெடப்
பள்ளமுமேடும்பாந்துதிரிவரேற்
கள்ளமனமுடைக்கல்வியில்லோரே."—திருமந்திரம்.

["உள்ளத்தினுள்ளே யுணருமொருவனைக், கள்ளத்தினாலுங் கலந்தறிவாரில்லை', யென்று திருமூலதேவர் சொல்லியுள்ளபடி பஹிர்முக சேவையாலும் பார்வையாலும், உண்மையான முழுமுதற்கடவுளைக் "கலந்தறிவது" கூடாமையென்றால், க்ஷேத்திரயாத்திரையென்றும், தீர்த்தயாத்திரையென்றும், கோயில், குளம் என்றும் ஏன் ஏற்படுத்தியிருக்கிறார்களென்று ஒரு கேள்விபிறக்கலாம். ஸமயாசாரியர்கள் பொதுஜனக்ஷேமார்த்தம், அந்தர்முக சிந்தனைசெய்யப் பக்குவமில்லாதவர்க்கு பஹிர்முகத்தில் பழக்க வாசனையால் நற்சிந்தனையுண்டாகி நல்லவாசனை சேர்ந்தால் அதனால் (சரியைகிரியையாதிகள் வழியாக) ஹிருதயசுத்தியும் யோக சிந்தனையும், அதனால் ஞானமும் பிறக்குமென்றேயன்றி வேறொன்றும் கருதியல்ல. இந்த உடலை உண்மையாக உள்ளபடி 'ஆணவம், மாயை, கர்மம்' என்கிற மும்மலமயக்கமுமொழியக் கண்டுணர்ந்தால் அப்பொழுது உண்மையின்னதென்று தனக்குத்தானே விளங்கும். இந்த பரதகண்டமானது மனுஷசரீரத்தை யொத்திருக்கிறது. இலங்கை மூலாதாரஸ்தானம். சேது ஸ்வாதிஷ்டானம் (ஆத்மாவிருக்கும் சொந்தவிடம்). பர்மா அஸ்ஸாம் ஒரு பக்கத்திலும், பெர்ஷியா ஆப்கனிஸ்தான் மற்றொருபக்கத்திலும் இருபுஜங்களாக விளங்குகின்றன. நாபிஸ்தானம் பஞ்சவடிதீர்த்தம் (கோதாவரி தீரம்). ஹிமாசலம் முள்ளந்தண்டு முனையாம் விசுத்திஸ்தானம் அதற்குமேலுள்ள. மேருபர்வதம் லலாடஸ்தானமாம். அதன் கொடுமுடி பிரம்மரந்தரம். ஹிமாசலத்துக்கும் விந்தியா பர்வதத்துக்கு மிடையேயுள்ள காஷ்மீரதேசம் ஹிருதயஸ்தானம். காசியென்னுமூர் விசுவநாதக்ஷேத்திரம். திரவேணிசங்கமம், (இடை பிங்கலை ஸரஸ்வதியென்னும் மூன்று முக்கிய நாடிகளும் கூடுமிடமாகிய முக்கியஸ்தானம்,) பிராயகை. இப்படி யாரொருவர் பஹிர்முக தரிசனமாகக் கண்டதையெல்லாம் அந்தர்முகமாகத் தன்னுள் பார்த்துக்கொண்டே யாத்திரைசெய்து வருகிறார்களோ அவர்கள் மஹாத்துக்களின் கருணைகடாக்ஷத்துக்குப் பாத்திரர்களாய் உண்மையுபதேசஞ் செய்யப்பெறுவதற்கின்றியமையா 'சற்சிஷன்' யோக்கியதையமையப்பெறுகிறார்கள். இந்தவுண்மையை ஸ்திரீபுமான்கள் யாவரும் உள்ளபடி யுணர்ந்துய்யும்படி மஹான்கள் பூர்வந்தொட்டு இந்தமர்மங்களை பக்தியால்நைந்து கனிந்தமனமுடை யன்பர்கள் தினமனுசந்தானிப்பதற்கு இலகுவாக இலகுவசனமாகவியற்றிக் கர்ண பரம்பரையாகப் போதித்துள்ளார். அதைச்செவியுற்றுச் சிந்தித்துக் காசியாத்திரையும் செய்யநேர்ந்த அன்பர் தாம் கர்ணபரம்பரையாத் தன்சகோதரியிடமிருந்து கேள்வியுற்றதை அவர் உள்ளச் சிந்தனையோடொத்துநிற்கவரைந்து நமக்கனுப்பியிருக்கிறார்.* பெரி

* We are indebted to Mr. V. S. Viswanatha Iyar B. A., Sub-Rigistrar of Pattukkottai, for the original copy of this beautiful ancient song describing the *Yoga Path*.

யோர் வாக்காயினும் கர்ணபரம்பரையாகக் கேட்டுணர்ந்ததாகையால் அங்கங்கே தப்புத்தவறுகள் சேர்ந்திருப்பது சகஜம். அதை புத்திமான்கள் பொறுத்து நல்லதைமட்டும் கிரகித்துக்கொண்டு அல்லதை அவர்கள் சூக்ஷ்மபுத்தியால் பார்த்து நிவர்த்தித்தும் அநுபவ ஆராய்ச்சியினால் திருத்தியு மெடுத்தாள்வார்களென்று நம்பி அதை யிங்கேபிரசுரிக்கிறோம். மூடர்கள் எப்போதும் தம்புத்திக் கெட்டாததையெல்லாம் தப்பென்று பழிப்பது சகஜமேயாதலால் அவர்கள் பழிப்புரை பயனற்றதென்று மேலோர் பாராட்டாது விடுவர்.]

## காசியாத்திரை.

ஸத்குருவின்கிருபையினால் காசியாத்ராமகிமை
சங்கிரகமாச்சொல்கிறேன் சாதுக்கள்மகிழவே!
விவேகசிந்தா மணிப்பேர் பொருந்த
வேதமுதலாயுறையும் வித்தைதனைவழங்கும்
ஆரியக்கொள்கைகள் அமிர்தமாப்பொழியும்
சீரியமாபத்ரமதில் சேர்ந்துள்ளேசுரக்கும்
மாதுரியரஸமெனவே மகிழ்ந்ததனைக்கொள்வீர்.

## I. கங்காயாத்திரை.

"புத்தியினால்நிச்சயிக்கும் சிருஷ்டிகளெல்லாம்
போதமயமாயிருக்கும் பூரண வடிவாய்
தேசாந்தரங்கடந்து சோபிக்குமாப்போல்
தசேந்திரியங்களையும் படியவேயடக்கி
ஆதாரகங்கையென் றுற்சாகமாச்சொல்லும்
அகங்காரமுதலான அந்தக்கரணத்தையும்
அகந்தைமமதையென்ற வெறியையும்விட்டு
காமக்ரோதப்பகையைக் கிட்டவொட்டாமல்
விவேகமென்னும்ஸத் வாசனையோடிருந்து
ஸ்தூலசூக்ஷ்மமாயிருக்கும் ராஜ்ஜியம்விட்டு
ஏகாக்கிரசிந்தையென்னும் வாகனமே லூர்ந்து
ஏகபோகமாயிருக்கும் காசிதனிலிறங்கி
ஈஷணைத்ரியங்களென்னும் வாஸனைபோக்கி
இந்திரியங்கள்பதினாலு முள்ளேயடக்கி
இடைபிங்கலையென்னு மிரண்டுநாடியை
யமுனைகங்கையாகப் பாவித்தென்னுள்ளே
ஸரஸ்வதி யாமந்தர்-வாகினியுங்கூடும்
திரிவேணி சங்கமத்தில் தீர்த்தங்க ளாடி
நிஷ்களங்க மாயிருக்கும் ஜபதபம்செய்து
நித்தியானந்தமாம் கோவிலில்புகுந்து
பக்தியுடனம்மைமகிழ் விச்வநாத ரைத்தேடி
பிரதிதினமும்தரிசித்து உள்ளேயிருந்தேன்.
அறிவென்றவிசாலாக்ஷி யம்மனுமப்போ
ஆகாமியசஞ்சிதங்கள் இரண்டையுமறுத்தாள்."

## II. கங்காஸ்நானமும்—சேதுதரிசனமும்.

"தாரகப்பிரும்மமென்ற விசுவநாதர்என்னை,
சந்தோஷமாக்கங்கா ஸ்நானம்பண்ணென்றார்.

ஹாலாஸ்யன்[1] கிருபையினால் சித்தத்துக்குள்ளே
ஆனந்தகங்கா ஸ்நானம்பண்ணிப்பிறகு
பக்தியுடன்ப்ரயாகையிலே ஸ்நானங்கள்பண்ணி
பரிபூர்ணமான'மணி கர்ணிகை'[2]யாடி
கங்கையோடெமுனை ஸரஸ்வதிமுதலாக்
கீர்த்தியுள்ளஎட்டெட்டுத் தீர்த்தங்களுமாடி
செத்தஜென்மமீடேற வடவ்ருக்ஷத்தின்கீழ்
நித்யதிருப்தி யாகவெகு பிண்டமும்போட்டு
தத்துவங்கள் தொண்ணூத் தாறுகயா வாளிகட்கும்
சந்தோஷமாகவெகு திருப்திகள்பண்ணி
நித்தியாநித்திய வஸ்துவிவேகமென்னும்
அத்தியாவஸ்தையாம்[3] காவடியுங்கட்டி
[4]நிரந்தரமென்கின்ற கங்கையைத்தூக்கி
ஸத்சங்கமென்னும் [5]ஸோபதிகளோடே
சிரவணமனனமென்னு மார்க்கமுந்தாண்டி
ஜநநமரணமற்ற ராமேச்வரத்தில்
ஸ்திரபோக மாகவங்கு வந்தேயிருந்து
அக்கியானத்தால்வந்த துக்கங்கள்தீர
ஆனந்தஸாகரத்தில் ஸ்நாநமும்பண்ணி
ஆதியந்தமற்றிருக்கும் இராமநாதருக்கு
அறிவென்னுங்கெங்கைகொண் டபிஷேகம்பண்ணி
ஜ்யோதிர்மயமாயிருக்கும் இராமநாதரை
சித்தத்துக் குள்ளேவைத்து தரிசனம்பண்ணி
அகண்டபரிபூரணமா யாதியந்தமற்று
இகபரமிரண்டிற்கு மேகமாயுள்ள
ஜாதிமதபேதமற்ற ஜோதிர்மயமான
ஆனந்த சொரூபந்தனி லைக்கியமுமாகி,—
அனுதினமுமவனருளை யேத்தியேபோற்றி,
ஜகந்தனிலிருந்துமே ஜகப்பிராந்தியற்று,—
யுகத்தினிலிருந்துமே யுகமெலாங்கடந்து,—
இகபரமிரண்டையும் ஒன்றாயறிந்துகொண்
டறிவுமயமாகியே யானந்தமுங்கடந்
தப்பாலேயதிதத்தில் அன்பாயமர்ந்தேன்."

* * *

## III. பலன்—அத்துவிதானுபவம்.

"தத்துவமேவத்துவமேவதத்"—சுருதி.

"அதுவேயான்நானேயது—அப்புறந்தானென்றுமில்லை;
"பேச்சில்லை மூச்சில்லை பேசவுந்தான் இடமுமில்லை;
"வாயு மனமுமில்லை வாதுசெய்ய நானுமில்லை;

(1) நஞ்சுண்ட கண்டன்-நீலகண்டன்-சகுணப்பிரம்மம்-உபாஸனைமூர்த்தி.
(2) 64-ஸ்நான கட்டங்களில் முக்கியமான ஒன்றின்பேர். 64-கட்டங்களும் கற்கவேண்டிய 64-கலைகளாம். 'யோகினிகள்' அறுபத்திநால்வருண்டென்று தேவி மாஹாத்மியத்தில் சொல்லியிருக்கிறது.
(3) அவஸ்தாத்திரியங்களுக்கும் அதீதமாய் நிற்பது-துரியாவஸ்தையாம்.
(4) எல்லையற்றது-நிறைவு குறைவற்றது-பூரணநிலை.
(5) ஸகாயம்-சாதனம்.

" ஏதுமில்லை யென்றாலும் எல்லாம் நிறைந்திருக்கு!
" காதில்லை மூக்கில்லை கண்ணோ டிமையுமில்லை;
" மாதில்லை மயக்கில்லை மன்மதரூப முமில்லை;
" கோதில்லைபழுதில்லை கோமளச்யாமளமில்லை;—
" இல்லை இல்லையென் றியம்பினு 'மில்லை'†யில்லை;
" அல்ல அல்ல வென்றறிவதே யன்மைநிலை‡;—
" அன்மைநிலைகடந் தாதிமுதற்பொருளுணர்ந்
" தூண்மையீதிதென் றுளம்பொங்கியோங்கிடுங்கால்
" தன்மைமுன்னிலைபிறந்து தானே தானாகிநிற்கும்
" அன்மையின்மையற்ற வானந்தாதீதத்தில்
" உண்மை உண்மையேன் றுண்மையேயாகிநிற்கும்
" வண்மையை யென்சொல்வேன்! வாயற்றேன்!

" பராபரமே!"

## "HANGED BY CONVICTION"
*(From the French of Eugene Chavette.)*

# "கோபுரத்தின் மேலேறிய குரங்கு"
அல்லது
## "மனதாற மரணதண்டனைக் குடன்பட்டவன்."

சுமார் 150 வருஷங்களுக்கு முன் கங்காதரய்யர் சிதம்பரம் நடராஜர்கோயிலில் "கரண்டி ஆபீஸ்" உத்தியோகஸ்தர். அவருக்கு ஒரு அருமைப்புதல்வன் பிறந்தான். வெகுநாள் தவமிருந்து பிறந்த ஒரு குழந்தையாதலால் அக்கோயிற்கடவுளது பெயரைச்சொல்லியே அக்குழந்தையை அழைத்தார்கள். ஆனால் நடராஜன் என்கிறபெயர் கொஞ்சம் பெரிதாயிருந்தபடியாய் அவனைச் சுருக்கமாயும் செல்வமாயும் ராஜாஎன்று கூப்பிடுவது வழக்கம். பையன்பிறந்ததும் ஒருவருஷத்துக்கெல்லாம் பிறந்தவீட்டுக்குக் கொள்ளிவைத்துவிட்டான். அவன் ஜாதகத்தைப் பரிசோதித்ததில் அவனுக்குப் பதினாறுவயதில் யானையேறும்படி தசையிருக்கிறதென்று ஒரு பெரிய ஜோசியர் சொன்னார். தாயில்லாப்பிள்ளையானதினாலும் பதினாறுவயதில் யானையேறவேண்டிய பிள்ளையானதினாலும் அவனுக்கு வெகு செல்வமாய் தினம் தயிரும் பழயதும் கோவிற் சர்க்கரைப்பொங்கலும் தவறாமற் போட்டு வந்தார்கள். பள்ளிக்கூடத்துக்குப் போய்ப் படிக்கச்சொன்னால் அவன் எழுத்துக்களெல்லாம் கரண்டிக்காம்புபோலும் வெண்கலப் பானைபோலும் அமைந்தன. பனிரண்டு வயதானதும் தகப்பனுடன் கோவிலுக்குப்போய் அவனுக்குப்பின் தான் வார்ஸாக வரவேண்டியதற்காக வேலையை நன்றாய்க் கற்றுக்கொண்டான். 16 வயதானதும் ஒருநாள் அவன்தகப்பன் மேற்கூறிய ஜோஸியரைக் கண்டு "ஏனையா பையன் 16வயதிற்கெல்லாம்

† 'இல்லை'—இன்மைப்பொருள்-அஸத்-சூன்யம்-பாழ்.

‡ அன்மைநிலை-நேதிவாக்கியலக்ஷியார்த்தசித்திநிலை. 'அல்லஅல்ல' வென்பது தத்துவங்களை நியதிகளை தற்கேற்றதோர் சாதனமாம். 'இல்லைஇல்லை' யென்பது இன்மைப்பொருளில் 'சூனியம்' 'பாழ்' என்று சூக்ஷ்மநோக்கிலும், 'அசத், சடம்' என்று ஸ்தூலப்பார்வையிலும் பொருள்படநிற்கும். காரியமாயுள்ள ஸ்தூலப்பிரபஞ்சமறைந்தவிடம் 'ஸ்தூலப்பாழ்' என்றும், சூக்ஷ்மப் பிரபஞ்சமாம் உள் விருத்திகள் அற்றவிடம் 'சூக்ஷ்மப்பாழ்' என்றும், அஜ்ஞான அந்தகாரரூபமான வாசனாவிருத்தி க்ஷயமாய் லயித்தவிடம் 'காரணப்பாழ்' என்றும் சொல்வர் மேலோர்.

யானையேறவானென்றீர்களே, ஒன்றையுங் காணோமே'' என்று கேட்டதற்கு அவர் "தயவுசெய்து திரும்பிப்பாரும்'' என்றார். திரும்பிப்பார்த்ததில் தன் பையன் கோவில் யானைமேலேறிக்கொண்டு வெள்ளிக் குடத்தில் திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவருவதைக் கண்டார். 18-வயதிற்கெல்லாம் பையன் "நாடகக்காரர்கள்'' என்னும் கூத்தாடிகளுடைய கூட்டத்திற்சேர்ந்து தன் பெயருக்குத் தக்கபடி ராஜாவேஷம் போடத் தொடங்கினான். அதற்கு வேண்டிய ரூபமும் ஸங்கீதஞானமும் சாரீரஸம்பத்தும் அவனிடத்தில் நன்றாயமைந்திருந்தன. அவன் தகப்பனார் அவனையழைத்து "முட்டாள் பையா, உன்னை நம்பி நானும் முட்டாளானேன். இனி நான் அதிககாலம் ஜீவிக்கப்போகிறதில்லை. உன்னைப்பற்றி யேக்கம் பிடித்துத் தான் நான் சாகப்போகிறேன்'' என்றார். அதற்குப் பையன் "அப்பா என்மேல்கோபிக்கவேண்டாம். ஜாதகத்தில் சொன்னதெல்லாம் ஸரிதான், ஆனால் ஜாதகமட்டும் அரை நிமிஷம் பிந்தி கணிக்கப்பட்டதாகத் தெரிகிறது. நானும் அப்படியே அந்த அரைநிமிஷங் கழித்துப் பிறந்திருந்தால் பகலிரவு இரண்டு வேளையும் யதார்த்தத்திலிராஜாவா யிருப்பேன். அரைநிமிஷம் தவறிப்போனதினால் தான் இப்பொழுது பெபரிலும் இரவிலும் (கூத்தாடும்பொழுதும்) மட்டும் ராஜாவாயிருக்கிறேன்'' என்றான். அடுத்த வருஷம் கங்காதரய்யர் "ஜோஸிய சாஸ்திரம் ஒருநாளும் பொய்யாகா''தென்று சொல்லிவிட்டு இறந்தார்.

ஆனால் கூத்தாடிகளுக்கு இக்காலத்தில் போல் அக்காலத்தில் அவ்வளவு பிழைப்பில்லை. ஆதலால் தகப்பனார் இறந்ததும் அவருடைய உத்தியோகத்துக்கேவந்து ராஜாகோவிலில் வேலை ஒப்புக்கொண்டான். 25 வயதிற்கெல்லாம் அவ்வுத்தியோகம் தனது பரம்பரையைவிட்டு விலகாமல் அதன் கௌரவ சின்னங்களைத் தனக்குப் பின்வகிக்கும்படி தானும் தன் தகப்பன் செய்ததுபோல் ஒரு பையனை வைத்துவிட்டுப் போகவேண்டுமே என்று கவலைகொண்டவன்போல், அக்கடமையைத் தீர்க்க முதல் சாதனமாகிய மனைவியைத் தேடலானான். அதாவது கலியாணத்துக்குப் பெண்தேடினான்.

அவ்வூரில் ஒரு ஏழை பாகவதருக்கு 12. வயதுள்ள ஒரு பெண் இருந்தது. அவரைக்கண்டு பேசினதில் அந்தப்பெண் வெகுநாளாய்த் தங்கக்காப்பும் சங்கிலியும் வைரக்கம்மலும் போட்டுக்கொள்ள ஆசைகொண்டிருப்பதாகவும், அவைகளைச் செய்து போடும் பக்ஷத்தில் மறுநாளே விவாகம் நிச்சயம் என்றும் ஏற்பட்டது. உடனே வீட்டுக்குப்போய் யோசிக்கலானான். இரண்டு காப்பும் சங்கிலியும் குறைந்தது 200 ரூபா, ஜோடி வைரக்கம்மல் 200 ரூபா, தாலியும் மற்ற சில்லரைகளும் 200 ரூபா, ஆக 600ரூபாய்க்கு 500 ரூபாயாவது கையிலிருந்தா லல்லவோ கலியாணமாகும். இதற்கு நாமெங்கே போகிறது என்று யோசித்தான். முதலில் ராஜா தன் அழகைக்கண்டே எல்லாரும் பெண் கொடுப்பார்கள் என்றெண்ணினான். வாஸ்தவத்தில் அவன் வெகு அழகாகவே யிருப்பன். ஆனால் அந்தப்பெண் கெட்டிக்காரியாதலால் அவன் அழகைக்கண்டு மயங்கவில்லை. காப்பு, சங்கிலி, வைரக்கம்மல் இவைகளைக் கண்டாலொழிய மயங்குகிறதில்லை என்று தீர்மானித்துவிட்டாள். இவனுக்கும் இதைக்காட்டிலும் சுலபமாய்ப் பெண்கிடைக்கிற வழியாயில்லை.

அக்கோயிலில் ஒருதீக்ஷிதர் தான் பிறந்தது முதல் "சிவதர்மம், சிவதர்மம்'' என்று சொல்லி ஒரு உண்டிவைத்துக்கொண்டு சுவாமி தரிசனத்துக்கு வருகிறவர்களிடத்திலெல்லாம் காலணா அரையணா யாசகம் வாங்கி 1000ரூபா வரையில் சேர்த்திருந்தார். அக்காலத்தில் ஹைதர் என்னும் ஒரு கொள்ளைக்காரன் பட்டாளங்களுடன் பகற்கொள்ளை யடிப்பதாக ஜனங்களெல்லாம் ஊரைவிட்டோடிக்கொண்டிருந்தார்கள். இந்த சிவதர்ம தீக்ஷிதரும் தன்னுடைய ஆயிர ரூபாயையும் கோயிலில் மனித சஞ்சாரமில்லாத ஒரு பாழ்மண்டபத்தின் சுவற்றின் கீழ் புதைத்துவைத்தார். அந்தமண்டபத்திற்குக் கொஞ்சதூரத்தில் ஒரு கிணறு இருந்தது. அதன் தீர்த்தம் வெகுருசியாயிருக்குமென்று அதிலேதான் எல்லாரும் தண்ணீர் எடுக்கிறவழக்கம். ராஜா ஒருநாள் அந்தக் கிணற்றில் மடைப்பள்ளிக்குத் தீர்த்தம் எடுக்கப்போனபொழுது மண்டபத்தண்டை தீக்ஷிதர் குனிந்துகொண்டு என்னவோசெய்துக்கொண்டிருக்ககண்டான். அன்று சாயந்திரம்

ராஜா தற்செயலாய் அவ்வழியாய்ப்போகையில் மண்டபத்தின்சுவற்றில் சிவதர்மம்என்று ஷிமயினால் பெரிதாய் எழுதியிருக்கக் கண்டான். அதற்குநேராகத் தரையில் குனிந்துபார்தான். ஏதோரிடத்தில் புதுமண் போட்டிருந்தது: கொஞ்சம் தோண்டினான். ஏதோ ஒருகல் கைக்குத் தட்டுப்பட்டது. நன்றாய்த்தோண்டிப்பார்த்ததில் அது ஒரு சிறு சதுரக்கல்லாயிருந்தது. அதைப் புரட்டினான். கீழே ஒரு சிறுசெம்பு இருந்தது. அதைத் தூக்கினான். கனத்தது: உள்ளே பார்த்தான். எல்லாம் மோகருக்களாக இருந்தது. உடனே அவனுடம்பெல்லாம் ஒருமயிர்க் கூச்செடுத்தது. மார்பு படபடத்தது. இதை ஏனடாதொட்டோம் என்று எண்ணினான். அதை அப்படியே எறிந்துவிட்டு ஓடிப்போக எத்தனிக்கையில் அக்கிணற்றுக்கு ஒரு சிறுபெண் குடமும் கையுமாய்த் தீர்த்தம் எடுக்கவந்தாள். உற்றுப்பார்க்கையில் அவள் தான் கலியாணத்துக்குப் பார்த்திருந்த பெண்ணாயிருக்கக் கண்டு திடுக்கிட்டான். எங்கும் ஓடவழியில்லாமல் செம்பும் கையுமாய் மண்டபத்தில் ஒரு பெரிய தூண்மறைவில் பதுங்கினான். அப்பொழுது ஒரு யோசனை பிறந்தது. "நாம் இந்தச் செம்பை எடுத்துவிட்டோம். இனி இப்பொழுது திருப்பிக்கொண்டுபோய் இருந்தபடி வைக்கப்போனால் யாராவது பார்த்துவிடுவார்கள். இன்னும் சற்றுநேரம் பொறுத்து நன்றாய் இருட்டினபிறகு கொண்டுபோய் இருந்தபடி வைத்துவிட்டுப் போய்விடுவோம். ஒருக்கால் இந்தப்பணம் தனக்குத் தேவையில்லை என்று தீக்ஷதர் வைத்துவிட்டுப் போய்விட்டாரோ என்னவோ? அவருக்குப் பிள்ளைகுட்டியில்லை, பெண்டாட்டி யிறந்துபோய்விட்டாள். இதில் நமது விவாகத்துக்குப் போதுமான பணமிருக்கும் பக்ஷத்தில் இதை நாமெடுத்துக்கொண்டாலென்ன? ஆயிரம் பொய்சொல்லி ஒரு தாலி கட்டச் சொல்லி யிருக்கிறதாம்: எங்களம்மாள் சொல்லியிருக்கிறாள்: ஒருபொய்க்கு ஒருரூபாயாக வைத்தாலும் நமக்கு ஆயிரரூபாய் வேண்டியதில்லை, ஐந்நூறு இருந்தாலும் போதும்." மேலும் இது திருட்டல்ல, செலவில்லாதவன் சொத்தை செலவுள்ளவன்எடுத்துக்கொண்டாலென்ன" என்றெண்ணிக்கொண்டே பணத்தையும் எண்ணினான். நாலு மோகருக்களை எடுத்துக் கீழேவைக்கும்பொதே "ஐயையோ திருடன் என்றொரு கூக்குரல்கேட்டது. உடனே அந்த நாலுமோகருக்களையும் ஒரு பெரிய கல்லின்கீழ் தள்ளிவிட்டு செம்பும் கையுமாய் ஓட ஆரம்பித்தான். "அதோ ஓடுகிறான்" என்று பின்னால் ஒருவர் துரத்தும் சத்தம் கேட்டது. அது அந்த சிவதர்மதீக்ஷதர் குரல் என்றறிந்துகொண்டு இன்னும் வேகமாய் ஓடினான். அவர் சாயந்திரம் சுவாமி தரிசனம் செய்துவிட்டு வீட்டுக்குப் போகையில் தான் புதையல்வைத்த இடம் கலைபடாமலிருக்கிறதா என்று பார்த்துவிட்டுப் போக வந்தவர், அந்த இடம் தோண்டப்பட்டிருப்பதைக் கண்டு "ஐயையோ திருடன்!" என்று கூவினார். ராஜா ஓடின சத்தத்தைக் கேட்டு "அதோ ஓடுகிறான்" என்று அவர் கூவவே ஜனங்கள் கும்பல்கூடி. ராஜாவைப் பிடித்துவிட்டார்கள். அவனைக் கச்சேரிக்குக்கொண்டுபோய் விசாரித்ததில் அவன் மேல் இரண்டு பெரிய குற்றங்கள் ஏற்பட்டன. முதலாவது பிறர்சொத்தைத் திருடினது, இரண்டாவது 'முன்னேப்பின்னே செத்திருந்தாலல்லவோ சுடுகாட்டுக்கு வழிதெரியும்' என்றபடி சாமர்த்தியமாய்த் திருடத்தெரியாமல் அகப்பட்டுக்கொண்டது. இவ்விரு குற்றங்களுக்காக அக்காலத்துச் சட்டப்படி அவனைத் தூக்கிலிட்டுவிடும்படி தண்டனை விதிக்கப்பட்டது.

ஊருக்குத் தெற்கே இரண்டு நாழிகை தூரத்துக்கப்பால் ஒரு பெரிய மைதானத்தில் கைதிகளை யடைக்க சிறைச்சாலையும் தூக்கு மேடையும் கட்டப்பட்டிருந்தது. ராஜாவை ஒருமாட்டுவண்டியிலேற்றி முன்னால் ஒருசேவகனும் பின்னால் ஒரு சேவகனுமாக விருதுகளுடன் சிறைச்சாலைக்குக் கொண்டுபோனார்கள். பாதிவழியில் அஸ்தமித்துவிட்டது. வண்டியின் "பார்" என்று சொல்லப்படும் உட்காரும்பாகம் நாலு நீண்டபலகைகள் சேர்த்து அமைக்கப்பட்டிருந்தது. அப்பலகைகளை ஆணி அடிக்காமல் சும்மா சேர்த்துப் பரப்பி யிருந்தமையால் ராஜா சந்தடிசெய்யாமல் ஒரு பலகையைப் புரட்டினான். ஒரு ஆள் நுழைய இடங்கொடுத்தது. அந்தப் பாரின் கீழ்ப்பக்கத்தில் மாட்டுக்குப் புல் வைக்கோல் வைத்துக்கொள்வதற்காக ஒரு சணற்சாக்கு நாலு மூலையினாலும் கட்டப்பட்டு ஊஞ்சல்

போல் தொங்கிக்கொண்டிருந்தது. சேவகர்கள் அப்புறம் பார்த்துக்கொண்டிருக்கும் சமயத்தில் ராஜா பலகையெடுத்த சந்தின்வழியாய் மெதுவாய் அந்தசாக்கில் இறங்கி தன்மேல் வைக்கோலை நன்ருய்ப் போர்த்துக்கொண்டு படுத்துவிட்டான். கொஞ்சநேரத்துக்கெல்லாம் சேவகர்கள் வண்டியில் குற்றவாளியைக் காணுமல் திகிலடைந்தார்கள். உடனே திருடன் எங்கேயோ ஒடிவிட்டானென்று ஒரு சேவகன் முன்னும் ஒரு சேவகன் பின்னுமாக கைதியைத் தேடிக்கொண்டு ஒடினர்கள். அவர்கள் கண்மறைவாய்ப் போனதும் ராஜா மெதுவாய் சாக்கிலிருந்து குதித்து ஓடிப்போனுன். இரவு முழுவதும் ஓடுகிறதும் பகல் முழுவதும் தூங்குகிறதுமாக நாலுநாள்ஒடிக் கடைசியில் வேறெங்கும் போகாமல் ஒருநாள் பாதிராத்திரி சிதம்பரம் வடக்குக் கோபுரத்துக்கெதிரில் வந்து நின்ருன். கோபுரத்தைக் கண்டதும் "நாம் இத்தனைநாள் ஓடினதெல்லாம் விழலுக்கிரைத்த நீராயிற்றே" என்று திகிலடைந்தான். அப்பொழுது சந்திரன் உதயமாகிக்கொண்டிருந்தது, தெற்குக்கோபுரத்தின் உச்சியிலிருந்து கயிறுகட்டி கருடனுருவமாக அமைக்கப்பட்ட ஒரு காற்ருடி பறந்துகொண்டிருந்தது. அதில் மூங்கிற் சிம்பினலிழைத்த மெல்லிய தந்திக்கம்பி கட்டப்பட்டுக் காற்றில் கானம் செய்துகொண்டிருந்தது. நிலவையும், காற்ருடியின் பஞ்சம சுருதியையும் கண்டவுடன் ராஜாவுக்குப் பாட ஆசையுண்டாயிற்று. உடனே "நின்னுபாவி" என்ருரம்பிக்கும் அய்யாவாள் கீர்த்தனை ஞாபகத்துக்கு வந்தது.

"நின்னுபா—ஆ—ஆ—ஆவீ—எள ஏட்ளா—யூந்து—ஊரு" என்று பாடிவிட்டு அண்ணாந்து பார்த்தான். "இந்தக்கோபுரம் தரையிற்பிறந்து நிலைபெற்று வானத்தில் வளர்ந்து தேவகானம் செய்கிறது. இந்தச் சந்திரன் தனக்கு ஈசுவரசிருஷ்டியிற் கொடுக்கப்பட்ட வானமாகிற ராஜ்ஜியத்தைக்கொண்டு திருப்தியடைந்து அதிக ஆசைப்படாமல் மந்தஹாஸமாய் விளையாடுகிருன். இந்தக் காற்றும் ஊருக்கெல்லாம் உயிர்ப்பிச்சை கொடுப்பதுடன் உயிரற்ற இந்தக் காற்ருடிக்கும் உயிருண்டாக்கிப் பாடச்செய்து களிக்கிறது. இவைகளுடைய காம்பீரியமென்ன, மௌனமென்ன? நமது அற்பத்தனமென்ன? இவைகளெல்லாம் இப்படிக் கவலையற்று சந்தோஷமாயிருக்க, நாம் மட்டும் ஏன் இப்படி அக்கிரமமான திருட்டில் பிரவேசித்து ஊருக்குப் பயந்தோடிக் கவலைகொண்டு தவிக்கவேண்டும்! ஆஹா இவைகளெல்லாம் அந்த ஆனந்தநடராஜனை உபாசித்து அவன்கட்டளையை மீருமல்நடத்தி அவனது நடனத்துக்கு அனுகுணமான பக்கவாத்தியங்களா யிருப்பதினலல்லவோ அவனுடைய ஆனந்தத்தில் இவைகளுக்கும் பங்குகிடைக்கிறது! என்று யோசிக்கையில் "நின்னுபாவி" என்னும் கீர்த்தனத்தின் அர்த்தம் அப்பொழுது தான் அவனுக்கு நன்ருய் வெளிப்பட்டது. கோபுரம், மரம், காற்று, காற்ருடி, சந்திரன் நட்சத்திரங்களெல்லாம் "உனக்கு இது தான் வழி இங்கே வா, எங்களுடன் கூட இருந்தால் பயமில்லை" என்றழைப்பதுபோல அவனுக்குத் தோற்றிற்று. அவைகள் இருக்கும் இடம் ஆகாயமாதலால் அங்கே எப்படிப் போவதென்று யோசிக்கையில் "இப்பொழுது தற்காலத்துக்குப் பொழுது விடியுமுன் உயிர் தப்பிக்கக் கோபுரத்தின்மேலேறி ஒளித்துக்கொண்டால் அதுவே ஆகாயத்துக்குப் பாதி வழிபோனதுபோலாகிவிடும்." என்றெண்ணி வடகோபுரத்தின் மேலேறினுன். அக்காலத்தில் அக்கோபுரம் இடிந்து பாழாய்க்கிடந்தது. அதில் ஒரு பெரிய பூதங் காத்துக் கொண்டிருப்பதாயும், அது இரவில் அவ்வழிபோவாரை அடித்து விடுவதாயும், அக்கோபுரத்தைக் கட்டக்கட்ட முடிவுபெருமல் இடித்து விடுவதாயும், ஒரு வதந்தி இருந்தது. "தூக்குப் போட்டிறப்பதை விடப் பிசாசடித்துச் சாவதுமேல்" என்றெண்ணி கோபுரத்தில் ஏறினுன். இவனைக் கண்டவுடன் பிசாசெல்லாம் பறந்துபோய் விட்டது! "என்னடா பிசாசையும் காணேம் ஒன்றையுங்காணேம்" என்று வருத்தமுற்ருன். பொழுது விடிகிற சமயமாயிருந்தது. நாலு நாளாய் ஓடின சிரமத்தினல் கோபுரத்தின் மேற்றளத்தில் வருஷக்கணக்காய்ச் சேர்ந்திருக்கும் மிருதுவான தூசியின்மேல், தொங்கிக்கொண்டிருக்கும் வௌவால்களால் அலங்கரிக்கப்பட்ட பந்தரின் கீழ் படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கினுன். தூக்கத்திலும் தான் ஓடுகிறதுபோலும் பின்னுல் யாரோ

துரத்துவதுபோலும், தன்னைத் தூக்கிலிடுவது போலும், தான் இறந்து விட்டதுபோலும், தான் மறுபடி பிழைத்துக் கலியாணம் பண்ணிக்கொண்டதுபோலும் ஏராளமாகக் கனவுகள் கண்டு நடுங்கிக் கொண்டிருந்தான்.

மறுநாள் சாயந்திரம் 2-மணிக்கு விழித்துக்கொண்டான். பசி அசாத்தியமாய்ப் பிடுங்கித்தின்றது. சவுக்கத்தின் தலைப்பில் 1 சேர் பட்டாணிக் கடலையும் அவலுமாக வைத்திருந்தான். அதற்கு சர்க்கரை இல்லையே என்று வருத்தப்பட்டுக் கொண்டே அதை இரண்டு கையாக வாரிப்போட்டுக் கொண்டு மென்றுவிட்டான்; கடுந்தாகமெடுத்தது. இருட்டுகிறவரையில் வெளியில் தலை நீட்டக் கூடாதென்று பொறுத்துக்கொண்டிருந்தான். கோபுரத்துக்குள்ளிருந்தபடியே சுற்றுமுற்றும் பார்த்தான். மரம் செடிகளெல்லாம் வெயிலில் வாடித் தவித்தன. கடைத்தெரு இரைச்சலில் காற்றாடியின் சப்தம கேட்கவில்லை. "நேற்றிரவு நிலவில் இந்தப் பாழ்கோபுரமும் இந்தக் காட்டாமணக்குச் செடிகளும் இருந்த அழகென்ன இப்பொழுது மூதேவி கூத்தாடுகின்றனவே! வெள்ளம் வடிந்த ஆறுபோலும் யௌவனம் தாண்டின ஸ்திரீமுகம்போலு மிருக்கின்றன!" என்றேங்கினான். தெற்கே திரும்பினான். தூக்கு மேடை கண்ணுக்குப்புலப்பட்டது. தூக்குமரம் ஒரு சிறு குச்சிபோல் தென்பட்டது அதன் உச்சியில் ஒரு காக்கை உட்கார்ந்து இவனைநோக்கி "கா, கா," என்று கூப்பிடுவதுபோல் கத்திக்கொண்டிருந்தது! "பா! அதைப் பார்த்தால் எனக்கு ஜ்வரமும் வாந்தியும் வரும்போலிருக்கிறது! இந்தத் தூக்கிலேறிக்கொண்டு சாக என்னமாகத் தான் மனம் துணியும்!" என்றெண்ணி நடுங்கினான்.

இரவு 8-மணிக்குத் தலையில் முக்காடிட்டு வெளிக்கிளம்பி தான் முன்னம் மோகராத் திருடின பாழ் பண்டபத்தில் போய் அந்தக் கல்லைப் புரட்டி அடியிற் கிடந்த நாலு மோகராக்களையும் எடுத்துக்கொண்டு தெருவில் போய் இராப்பிச்சைக்காரர்களுடன் தானும் ஒரு பிச்சைக்காரனாக வேஷம் போட்டுக் கொண்டு பிச்சைவாங்கி சாப்பிட்டு மறுபடி கோபுரத்துக்கு வந்து படுத்துவிட்டான்,

முதல் ஐந்தாறு நாளைக்கு ராஜாவுக்கு மூச்சுவிட முடியாமல் வேலையிருந்தது. கோபுரத்திலிருந்த குப்பையெல்லாம் பெருக்கி சுத்தப்படுத்தினான். கரையான் புத்துகளை இடித்து, அவைகளிலிருந்த ஒரு பாம்பை வாலைப்பிடித்துச் சுற்றி வீசி வெளியிலெறிந்து, வேறு ஜாகை பார்த்துக் கொள்ளும்படி நோட்டீஸ் கொடுத்துவிட்டான். அதைக் கொல்ல அவனுக்கிஷ்டமில்லை "இவ்வளவு பெரிய உலகத்தில் நம்மிருவருக்கும் ஏககாலத்திலிருக்க இடமிலலாமற் போகவில்லை. மேலும் என்னைப்போலவே நீயும் ஊரார் கண்ணுக்ககப்படாமல் ஓடி ஒளிகிறவனாதலால் எனக்கு முக்கிய சிநேகிதனாய்விட்டாய்!" என்றான். வெளவால்களின் நாற்றம் அவனுக்குத் தலை வலியும் வாந்தியும் வரும்போலிருந்தது. அவை வந்தடையாதபடி காரை முள்ளும் இலந்தைமுள்ளும் சம்பாதித்து உயரக்கட்டி அவைகளின் மேல் காகிதம் வைத்துக் கற்பூரக் கட்டிகளைப் பரப்பினான். சோறு வைத்துக்கொள்ள ஒரு திருவோட்டுக் காயும் தண்ணீருக்கு ஒரு சுரைக்குடுக்கையும் சம்பாதித்தான். ஒரு கத்தரிக்கோல் சம்பாதித்துத் தலையை நன்றாய் மொட்டை அடித்துக்கொண்டான்.

ஏதோவொரு நாள் நல்ல மழை பெய்தது. கோபுரத்துக்குள்ளெல்லாம் சாரலடித்துப் படுக்க இடமில்லாமல் நனைத்து விட்டது. அன்று முழுவதும் சாரலிலடிபட்டதால் ராஜாவுக்கு சுரம் வந்து விட்டது. சாயந்திரம் மழை நின்று தூவானமாகத் தூறிக் கொண்டிருந்தது. எங்கும் பிரமஹத்திக்காரன் மனதுபோல் புகையும் இருளுமாகக் குமுறிக் கொண்டிருந்தது. அப்பொழுது தெற்கே திரும்பினான். தூக்குமரம் கண்ணுக்குத் தென்படவில்லை. ஆனாலும் அதன் ஞாபகம இவனுக்கு வந்தது. அவனுடைய தேகஸ்திதியும் ஆகாயத்தின் ஸ்திதியும் எதைப்பார்த்தாலும ஒரு பயங்கரமான ஏக்கத்தை உண்டு பண்ணிக்கொண்டிருந்தன. "அப்பா இந்த மழையில் சாகிறவனைப்போல் மூடன் உலகத்தில் வேறில்லை. அதிலும் தூக்கிலேறி சாகிறவன் முழுமூடன். இந்த மழையிலும் சாரலிலும் நமது பிணம் விறைத்து அழுகிப்போனால் என்ன நாற்றமுண்டாகும். இவ்வளவுக்கும் இந்த தேகத்திற்

குட் சென்றிருக்கும் சர்க்கரைப் பொங்கலுக்கும் நெய்க்கும் கணக்கு வழக்கில்லை." என்றெண்ணினான். அதுமுதல் தேகத்திலிருந்த அபிமானத்தை விட்டான். தூக்குப்போட்டிறப்பதைக் காட்டிலும் கோபுரத்திலிருந்தே சுரமடித்தாவது விருத்தாப்பியமடைந்தாவது சாவது மேலென்றெண்ணினான்.

இப்படி இரண்டு மாஸகாலம் சென்றது. அதற்குள்ளாக இவ்வித வாழ்க்கையும் ராஜாவுக்கு ஒத்துப்போய்விட்டது. பிச்சைக்குப் போகும்பொழுது பாடும் பொருட்டு தாயுமானவர், பட்டணத்தார் இவர்கள் பாடற் புத்தகங்களை வாங்கி அவைகளைப் பாடம் பண்ணினான். இவனுடைய திவ்யசாரீரத்துடன் அப்பாடல்களைப் பாடும்பொழுது மற்றவர்க்கில்லையென்று சொல்வாரும் இவனுக்குத் தவறாமல் பிச்சைபோட்டு வந்தார்கள். நாடகத்திற் பழகினவனாதலால் தன் குரலைப்பிறரறியாதபடி மாற்றிக்கொண்டான். "உமி உமியாய்த் தின்றால் ஒரு நொய் அகப்படாதா" என்கிறபடி கிளிப்பிள்ளைபோல்இத்தனை பாட்டுக்களைப் பாடம் பண்ணின இவனுக்கு இரண்டொரு பாட்டுக்கு உண்மையான அர்த்தமும் கொஞ்சங் கொஞ்சமாய் வெளிப்படுவது போல் தோற்றிற்று. சாயந்திரவேளையில் வானத்தையே உற்றுப்பார்ப்பவனுக்குப்புதிய நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றாய்த் தெரிய வரும். பாலியத்தில் கொஞ்சம் சம்ஸ்கிருத பாஷையில் சப்தமும் அமரமும் உருவேற்றியிருந்தான். வடக்கு ஸந்நிதியில் ஒரு பெரிய வக்கீல் வீட்டில் வால்மீகிராமாயணம் படித்து அர்த்தம் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அதைத் தினம் கவனித்து வந்தான். பத்து ரூபாய் கொடுத்து ஒரு ராமாயணம் வாங்கி அன்றன்று படிக்கப்போகிற பாகத்தை முன்னதாகவே தானொருதரம் பார்த்துத் தனக்குத்தானே அர்த்தம் பண்ணிக்கொள்ள முயற்சித்தான். இந்த மூலமாக ஸம்ஸ்கிருதத்தில் கொஞ்சம் ஞானமுண்டாயிற்று. இக்கிரந்தங்களின் ஸாரம் கொஞ்சம் மூளையில் உறைக்கவே கீதை படிக்க ஆரம்பித்தான்.

நேற்று வரையில் இந்திரசபாவும் தாராசசாங்கமும கூத்தாடின இந்தக் திருட்டுப்பயலுக்கு தடிமரன்று இவ்வளவு ஞானம் எப்படி ஏற்பட்டதென்று பலர் சந்தேகிக்கலாம். உலகத்தில் நடக்கிற சங்கதிகளுக்கெல்லாம் காரணம் கேட்டால் நம்மால் சொல்லமுடியுமா? நாமென்னவோ திருடன், போக்கிரி, கொலைகாரன், பாவி என்கிறோம். அந்தப் பாவியினிடத்துள் ஒரு கடவுள் இருந்து "தோற்றவன் கட்சி என் கட்சி" என்று ஆட்டி வைக்கிறாரென்பதை மறந்து விடுகிறோம்!—"அதோ அந்தக் கோடி வீட்டு சேஷன் என்ன வரவர இப்படித் துரும்பாய்ப் போகிறானே" என்றொருவர் கேட்கிறார். இன்னொருவர் "ஆமாம் அவன் என்றைக்குத்தான் வாழ்ந்தான். எப்பொழுதும் வயிற்று வலி—ஜன்மாந்திர பாபம்—இன்றைக்கோ நாளைக்கோ என்றிருக்கிறானாம்" என்று சொல்லுகிறார். நாலு நாளைக்கெல்லாம் சேஷன் எப்படியிருக்கிறானென்றால் "யாரோ வைத்தியன் ஒரு சூர்ணம் கொடுத்தானாம். கொஞ்சம் பசியெடுத்து சாப்பிடுகிறான்—வெளியில் நடமாடுகிறான்" என்கிறார்கள். ஒரு மாஸத்துக்கெல்லாம் முன்பேசின சுப்பன் ராமன் இருவரையும் ஒரு கையால் தூக்கி எறியக்கூடிய பலத்தோடு சேஷன் தெருவில் போகிறான். அப்பொழுது சுப்பனைக்கேட்டால் "அதற்கென்ன சேஷன் எப்பொழுதும்ம தடியன்—நடுவில் மட்டும் கொஞ்சம வியாதியினால் அவஸ்தைப்பட்டான" என்கிறார்.

இவைகளுக்கெல்லாம் காரணம் சொல்லப் போகாது. இவ்வேடிக்கைகளை யியற்றும் கபட நாடக சூத்திரதாரி இன்னானென அறிந்துகொண்டு புனசிரிப்புக் கொள்வதே நமது கடமை. கடவுளைமட்டும் நம்பக்கூடாது: ஒருவனைப் பாபி என்போமானால் அவனுடைய பாவத்தையே அவனுக்கு மோக்ஷசாதனமாக ஆக்கிவிடுகிறார்! இன்னொருவனைப் புண்ணியவானென்றால், அவனது புண்ணியத்தையே அவனுடைய மோக்ஷத்துக்கு இடையூறாகத் திருப்பி விடுகிறார்!

இதற்கு மேலும் "காரணமில்லாத கதை என்ன கதை" என்று யாராவது முணுமுணுத்தால் அவர்களுக்கு மட்டும் ஒருவாறு காரணம் சொல்லப் புகுவோம். முதலாவது, ராஜாவுக்கு "வந்ததெல்லாம் வரட்டு' மென்கிற முரட்டுத் தைரியம் உண்டாகி விட்டது.

எப்பொழுது ஒருவன் இன்ன திசையிற் செல்லுகிறோமென்றறியாமல் வெள்ளம் போனபடி போகிறானோ அப்பொழுதுதான் அவனுக்குப் பெரிய அனுபவங்கள் கிட்டுகின்றன—என்பதற் கடையாளமாம். இரண்டாவது, உலகபயமும் கவலையும் நீங்கினது. இத்தனை நாளாய் கோவிலுக்குப் போகவேண்டும் சமைக்கவேண்டும் சம்பாதிக்க வேண்டும் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டும நாலுபேருக்கு மதிப்பாக உலகத்தாரைப் போலிருக்க வேண்டுமென்றிருந்த கவலை பயங்களெல்லாம் போய் இப்போது வேலையில்லாமற்றிரிந்தமையாலும், அப்படி மிகுந்த சாவகாசத்தைத் துன்மார்க்கத்திற் செலவழிக்க உலக சம்பந்தமே யில்லாமையாலும், படிப்பில் புத்தியைச் செலுத்த சாதனங்களு மேற்பட்டமையாலும் இவ்வழியிற் திரும்பினான். ஒருவன் உலக சம்பந்தமே யிராமல் தனியே மட்டும் கொஞ்ச நாளைக்கிருந்தால் அவன் எப்படியும் கடைத்தேறுவான் என்பது நிச்சயம். மூன்றாவது, ராஜா அப்படி முழுவதிலும் கெட்டுப் போனவனல்ல; அவன் திருடினதுகூட அரை மனதோடும் சாதக பாதகங்களை வெகு நேரம் யோசித்த பிறகுமே தான் திருட மனந்துணிந்தான். கடைசியில் நான்காவதாக, மற்றக் காரணங்களுக்குக் குறைவில்லாத இன்னொரு காரணம் என்னவெனில்: பசிக்கிற வேளைக்கு இனமாக அரைவயிற்றுக்குக் கஞ்சியோ கூழோ அகப்பட்டதோடுகூட புஸ்தகம் வாங்குவதில் செலவழிந்தது போக மூன்று மோகராக்கள் கையில் மிகுதியிருந்தன. என்ன இருந்தாலும் கடைசியில் லக்ஷ்மியின் கடாக்ஷமும் கொஞ்சம் வேண்டியதுதான். அது எப்படிப் போனாலும் போகட்டும் ராஜாவின் ஞானம் விருத்தி யாயிற்றோ ஆகவில்லையோ, நமக்குத் தெரியாது! அவன் உடம்பு மட்டும் சந்தேக மில்லாமல் விருத்தியாய்க் கொண்டு வந்தது; பழையமுதுப்பானைபோல் ஜில்லென்று மழமழ வென்று பருத்துக் கொண்டு ஆனான். தேகத்தில் ஒரு யானை பலம் உண்டாகி விட்டது. தடிப்பிரமசாரி என்றால் அவனுக்கே தகும். துலுக்கனைப் போல் தாடி மீசை வளர்த்துக்கொண்டு தலையும மொட்டை யடித்து விடவே ஆள் அடையாளம் தெரியாமற் போய்விட்டான். பழைய நியாயாதிபதி, இவனைப் பார்த்தாலும் இவன் தனது தண்டனையினின்றும் தப்பித்தோடினவன் என்றறிய முடியாது. மனதிற் கவலையற்றுப் போனால் தேகம் பருப்பதற்குக் கேட்பானேன்.

ஆனால் திருப்பித் திருப்பி வந்ததே வந்து கொண்டிருந்தால் யாருக்குத்தான் அலுக்காது? ஒரு மகாராஜா தினம் பொழுது விடிந்தால் ராஜபோஜனம் சாப்பிட்டு விட்டு சட்டை, நிஜார், கிரீடம் முதலிய ஆபரணங்களை அணிந்துகொண்டு சபைக்குப் போய் ஸிம்மாசனத்தில் உட்காருவதும் பொழுது போனால் ஆஸனத்தை விட்டிறங்கி ஆபரணங்களைக் கழற்றி விட்டு மறுபடியும் ராஜபோஜனத்துக்குட்காருவதுமான பெரிய தொந்திரவைப் பொறுக்க மாட்டாமல் திடீரென்று ஒரு நாள் இரண்டுமுழக் கந்தலை இடுப்பில் சுற்றிக்கொண்டு திருட்டுத்தனமாய் பழைய முது சாப்பிட்டுவிட்டு தூக்குப் போட்டுக் கொண்டு இறந்தாரென்று ஒரு கதையுண்டு. அதுபோல் நம்முடைய சிறிய ராஜாவுக்கும் தினம் அஸ்தமித்தால் பிச்சைக்குப் புறப்படுவதும் சாப்பிடுவதும் தூங்குவதும் பொழுது விடிந்தால் ஆந்தைபோல் விழித்துக்கொண்டு கோபுரத்துக் குள்ளேயே பதுங்கிக் கொண்டிருப்பதும் அலுத்துப்போக ஆரம்பித்தது, முதல் இரண்டு மூன்று மாஸத்துக் கென்னவோ இந்தப் பிச்சைக்காரவாழ்வு கொஞ்சம் விநோதமாயிருந்தது. பிறகு வரவர ஏதாவது புதிதாய் ஒரு ஆச்சரியம் நடந்தால் தான் உயிர் பிழைக்கலாம் போல் தோற்றிற்று.

(இன்னும் வரும்.) ஸ்ரீ ராஜநாயகி.

## The Stories of Mahabharata – for Children.

*(Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer, B. A.)*

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக்குபயோகமாக எழுதப்பட்டவை.

(105-வது பக்கத்தொடர்ச்சி.)

### ஆதிபர்வம்.

### 11. இந்திரப்பிரஸ்தம் அமைத்தது.

பின்பு பாண்டவர்களும் நூற்றுவர்களும அத்தினபுரியில் பகையொழிந்து ஒருமைப்பட்டு வாழ்ந்திருந்தார்கள். அப்போது, திருதராஷ்டிரன் யுதிஷ்டிரருக்கு மகுடாபிஷேகம் செய்யக்கருதி, அவ்வாறே பந்து மித்திரர்களோடும் மந்திரி பிரதானிகளோடும் வியாசர் தௌமியர் முதலான முனிவர்களும் வேதியர்களும் தக்க சடங்குகளைச் செய்து கங்காமுதலிய புண்ணிய தீர்த்தங்களால் வேதவிதிப்படி அபிஷேகம் செய்ய முடிசூட்டிச் சிறப்புச்செய்தான். ஆயினும், பின்பு சில நாளைக்கெல்லாம் துரியோதனன் முதலானோருடைய துர்ப்போதனையால் திருதராஷ்டிரன் பாண்டவர்களை அத்தினபுரியைவிட்டுக் காட்டில் அழிந்து பாழாயிருந்த ஒரு நகரிற் சென்றிருக்கும்படி உத்திரவு செய்ய, யுதிஷ்டிரரும் அவ்வுத்திரவைச் சிரசாவகித்துத் தம்பிகளோடும், பரிசனங்களோடும் அங்குச் செல்வாராயினர். அப்போது பாண்டவர்களுக்கு உயிர்த்துணைவராய்ப் பாரதயுத்தத்தை நடப்பிக்க அவதரித்தருளிய ஸ்ரீகண்ணபிரான் அவர்களுக்கிரங்கித் தெய்வத்தச்சனாகிய விசுவகர்மாவை அழைத்து இந்திரலோகத்தினும் சிறப்பான ஒருபுதிய பட்டணத்தை அங்கு அமைப்பித்து அதற்கு இந்திரப்பிரஸ்தமென்று பெயரிட்டு அதில் அவர்களைக் குடியேற்றியதுமன்றிச், சுற்றுமுள்ள காடுகளையும்நீர்வளம்நிலவளம்பொருந்திய செழிப்பான இனிய நாடாக மாற்றுவித்தனர். பகவானுடைய பூர்ணநுக்கிரகத்தைப் பெற்றவர்களுக்கு யாது குறையுள்ளது? இவ்வாறு, இரும்பைச் செம்பொன்னாக இரசவாதத்தால் மாற்றியதுபோலப், பேய்களும் இருத்தற்கஞ்சும் பெருங்காட்டை அழித்து அமைக்கப்பட்ட அந்நகரின் அழகையும் செல்வத்தையும் கண்டு அளகா நகரம் வடக்கே ஓடியது; அமராவதியும் கண்ணுக்குப் புலப்படாமல் ஒளித்தது; இலங்கை நகரும் கடலிற் புகுந்ததென்று கவிவர்ணித்திருத்தலின் அதன் பெருமையை யாம விரிவாக வேறு எடுத்துக் கூறவேண்டுவதில்லை.

இந்திரப்பிரஸ்தத்தில் தருமபுத்திரர் தம்பிமார்களோடிருந்து அரசுபுரிந்து வருகையில், அங்கு ஒருநாள் நாரதமுனிவர் வந்து பாண்டவர்களை நோக்கி, "முன்னாள் சுந்தோபசுந்தரர் என்னும் இரண்டு அசுரர்கள் திலோத்தமையை மோகித்து அதனாற் பகைகொண்டு ஒருவரோடொருவர் சண்டையிட்டு மாண்டு போனார். ஆதலின், நீங்களைவரும் திரௌபதியை ஏககாலத்தில் சேர்தல்தகாது; வருடத்துக்கொருவராக மாறிமாறி மனைவியாகக் கொள்ளல் வேண்டும்; ஒருவனுக்குரியளாய் அவனுடன் கலந்திருக்கும் காலத்தில் மற்றொருவன் அவளைக்காணவரின் அவன் ஒருவருடகாலம் அப்பாவம் நீங்க மாறுவேஷம் பூண்டு தீர்த்தயாத்திரை செய்வதாக நியமித்துக்கொள்ளல் வேண்டும்" என்று கூறப், பாண்டவர்களும் அதற்குச் சம்மதித்து அவ்வாறே நடந்துவந்தார்கள்.

### 12. அருச்சுனன் தீர்த்தயாத்திரை செய்தது.

இதன்பின் ஒருநாள் அரண்மனைவாயிலில் வந்து ஒரு பிராமணன் தனது பசுக்கூட்டத்தை வேடர்கள் கவர்ந்து போனார்களென்று முறையிட, அருச்சுனன் அந்தணனைத் தேற்றிப் பசுக்களை மீட்கும் பொருட்டுத் தான் ஆயுதங்களை யெடுக்க உள்ளே போனான். அப்போது அங்கு தருமபுத்திரருடன் திரௌபதி சல்லாபம் செய்திருக்க அவளைக் கண்டதனால் மனநடுங்கி வருத்தமுற்றுப் பசுக்களை அந்தணனுக்கு மீட்டுக்கொடுத்த பின்பு தாங்கள் நாரதமுனிவர் முன்னிலையில் செய்துகொண்ட பிரதிக்கினைப்படி மாறுவேடம் பூண்டு அருச்சுனன் தீர்த்தயாத்திரை செய்யப்போனான், அவன் அவ்வாறு சென்று அநேக தலங்களைத் தரிசித்துக்கொண்டு வருகையில், கங்கைக்கரையில் நாககன்னிகை ஒருவளைக்கண்டு மோகித்து அவளுடன் பாதாளலோகம் சென்று அவளை மணம்புரிந்து அராவான் என்னும் ஒரு மகனைப்பெற்றான். பின்பு அங்கு நின்று புறப்பட்டுத் தெற்கு நோக்கிச்சென்று பாண்டிய ராஜதானியாகிய மதுரைமாநகரை அடைந்து அங்கு அப்பாண்டியன் புத்திரியாகிய சித்திராங்கதையென்பவளைத் திருமணம் செய்தான். பின்பு

பப்பிரவாகன் என்னும் மகனைப்பெற்று அம்மகனை நிபந்தனைப்படியே பாண்டியனுக்குக் கொடுத்துவிட்டு மனையாளையும் அங்குதானே யிருத்தி மீண்டும் தலங்களைத் தெரிசித்துக் கொண்டு கடைசியில் மேற்குக்கடலில் துவாரகை நகரையடைந்தான். அங்குச் சிலநாள் தங்கியிருந்து ஸ்ரீகண்ணபிரானருளால் அவரது தங்கையாகிய சுபத்திரையை மணம்புரிந்து அவளுடன் இந்திரப்பிரஸ்தம் சேர்ந்து சகோதரர் களிக்கச் சுகமாய் வாழ்ந்திருந்தான். அக்காலத்தில் சுபத்திரையின் வயிற்றில் அர்ச்சுனனுக்கு அபிமன்யு என்று ஒரு புத்திரன் அவதரித்தான். பின்பு திரௌபதி வயிற்றிலும் தருமன் முதலான ஐவருக்கும் ஐந்து புத்ரர்கள் உண்டானார்கள். ஆக இந்த ஆறுபிள்ளைகளுக்கும் குலமரபுப்படிச் செய்யவேண்டும் சடங்குகளெல்லாம் செய்து வித்தியாப்பியாசமும் செய்வித்து வில் முதலிய ஆயுதப்பிரயோகங்களும் கற்பிக்க அறுவரும் உருவிலும் வலிவிலும் அறிவிலும் திறமையிலும் தமக்கிணை இல்லையென்று உலகத்தார் கொண்டாட வளர்ந்து வந்தார்கள். அறுவர்களிலும் அபிமன்யுவே எவ்விதத்திலும் மேலாகச் சிறப்பு வாய்த்திருந்தான்.

## 13. காண்டவ வனத்தைச் சுட்டெரித்தது.

பின்பு ஒருநாள் ஸ்ரீகண்ணபிரானும் அருச்சுனனும் இந்திரப்பிரஸ்தத்தில் சேர்ந்திருக்கும்போது அக்கினி தேவன் ஒரு பிராமண வடிவம் கொண்டு அவர் முன்னிலையில் வந்து, "ஐயன்மீர்! நான் பசியால் மிகவும் வருந்துகின்றேன். என்பசிதீர உணவு தந்தருள வேண்டும்" என்ன, அதற்கு அவர் ஆகவென்று சம்மதித்தார்கள். உடனே அவன் அவரை நோக்கித்தான் அக்கினி தேவரென்றும், தன் பசியைத்தீர்க்க காண்டவ வனத்தைத் தனக்கு உணவாகக் கொடுக்கவேண்டுமென்றும் கூறஅவர்கள் அப்படியே சம்மதித்தார்கள். அக்கினியும் சந்தோஷித்து அருச்சுனனுக்குக் காண்டீபம் என்னும் வில்லும், கணைகள் மாளாத தூணியும் கொடுத்து அவ்வனத்திற்பற்றி அதை அழிக்கத் தலைப்பட்டான். அக்காண்டவ வனம் இந்திரனால் காக்கப்பட்டு அநேக உரகர் அசுரர்களுக்கு வாசஸ்தானமாய் எண்ணிறந்த ஜந்து சாலங்கள் அடங்கிய ஒரு பெரியவனம். அக்கினி தேவன் அவ்வனத்திற் பிரவேசித்து அதனை எரிக்கத்தொடங்கினதும் தேவேந்திரன் வனம் அழிவதோடு அதில் இருந்த தன் உயிர்த்தோழனாகிய தக்ஷகன் தன் குடும்பத்தோடு மாண்டுபோக வருமாதலின் அதைத் தடுக்கும்பொருட்டு சப்த மேகங்களையும், ஏவப்பிரளயகாலம் போலப்பெருமழை பொழிவித்ததுமன்றித் தானும் மற்றத் தேவர்களோடு அங்குப் போர்க்கோலம் கொண்டு சென்று நின்றான். அருச்சுனனும் கண்ணபிரானும் ஆயுதங்கொண்டு அவ்வனத்தைச் சூழ்ந்து அதினின்று ஈ எறும்புகள்கூட வெளிப்போகாமல் காத்து நின்றார்கள். இந்திரன் ஏவலால் வந்த மழையை அருச்சுனன் சரக்கூடு கட்டி ஒரு மழைத்துளியேனும் உள்ளே செல்லாமல் தடுத்துவிட்டான், அப்போது தக்ஷகன் என்னும் சர்ப்பராசன் தன் மகனையும் மனைவியையும் விழுங்கி ஆகாயத்திலெழ அதைக்கண்டதும் அருச்சுனன் அம்பினால் அவனைத் துணித்து வீழ்த்தினான். அதனால் தக்ஷகன் தப்பியோடினானாயினும் அவன் மனைவி வாய்கிழிந்து மாண்டுபோனாள். மகனாகிய அச்சுவசேனன் வாலறுப்புண்டபோதினும இந்திரனால் உயிர் பிழைத்துப்பின்பு தன் தாயைக் கொன்ற அருச்சுனனுக்கு யாவர் பகைவரென்று தேடிக்கொண்டு கர்ணனிடம் சென்று அவன் கையில் கணையுருவம் கொண்டிருந்து அவ்வருச்சுனனைக் கொன்று பகைதீர்த்துக் கொள்ளச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். பின்பு இந்திரன் தன் நேசனைக்காணாமையால் துக்கங்கொண்டு அருச்சுனன்மேல் கோபித்து அமரசேனைகளோடு சண்டைக்குப்புறப்பட அவன் அமரர்கள் யாவரும் புறங்கொடுத்தோடும்படி அவர்களை அடித்துத்துரத்தினான். பின்பு வாயுதேவன் சமாதானஞ் செய்ய இந்திரன் சமாதானப்பட்டுத் தன் சேனைகளோடு சுவர்க்கத்துக்கு மீண்டான். காண்டவ வனம் முழுதும் உண்டு அக்னிதேவனும் பசிடங்கிச் சந்துஷ்டியடைந்து அருச்சுனனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்துச்சென்றான். அருச்சுனன் அன்றுசெய்த வீரச்செய்கையைக் கண்டு அனைவரும் அவனைப் புகழ்ந்தார்கள்.

ஆதிபர்வம் முற்றிற்று.

## THE BOYHOOD OF GREAT MEN OF THE WEST.—II. HORATIO NELSON.

## மேற்றிசை மேதையோர் பாலிய சரிதை.

### II. ஹோரேஷ்யோ நேல்ஸன்.

(*21st October*, 1905, *the Centenary of Trafalgar.*)

மின்னுமேற்றிசை மேதையோர் பாலிய
நன்னயச் சரிதந்தனை நற்றமிழ்ச்
சொன்னயம் பெறச்சொற்றிட வசனமாய்
மன்னருட் கலைமாமகள் காப்பரோ.

ஆழிசூழ் ஆங்கிலேய தேயத்து கப்பற் போர் வீரர்களில் ஒப்பற்றவராகிய நெல்சன் என்பவரைப் பற்றிய பால்ய சரிதையைச் சிறிது விவரிப்பாம். எண்டிசையும் நல்லிசை நாட்டிய இவர் தன்றேய வபிமானத்தை முன்னிட்டு அது பொலி யுற்று உன்னத நிலைமையடைய மெய்வருந்தி இளமை முதல் உழைத்து வந்தார். தன் பெயரைக் கேட்கையிலேயே பகைவர் படை கலங்கவும் நாட்டார் தன் நாமத்தை நயம்பட விசைக்கவும் இன்னும் இத்தகைய புகழடைவதற்குரியவர் இவரே என சொல்லும் அறிகுறிகள் இவர் குழவிப் பருவத்தே துலங்கி விளங்கிற்று. பிறரையடுத்து அவருடைய கருணையும், நன்குமதிப்பும், தனக்கெப்போது வாய்க்குமோ வெனக் காத்திருந்து முன்னுக்கு வர வேண்டுமென வெண்ணம் உதிக்கப் பெறாதவனாகி தன் சொந்த முயற்சியால் தன் தேசத்திற்கும், தேசாதிபனுக்கும் செய்யவேண்டிய கடமைகளை உணர்ந்தவனாய் ஊக்கத்தோடும், மனவெழுச்சியோடும், உழைத்து உன்னத பதவியடைந்தான். இத்தகையப் பெருமிதத் தோற்றங்கள் இவரிடம் சிறந்து விளங்கினமையின் ஆங்கில நாட்டார் இவரைப் பற்றிச் சிந்திக்கும் தோறும் இவருடைய தேசாபிமானத்தையும் உயுத்தகளத்தில் உயிர் துறக்குமளவும் இவர் காட்டிய வியக்கத்தக்க வீரத்தன்மையைப் பற்றியும் பலவாராய்ப் புகழ்ந்து கொண்டாடி இன்றளவும் களிப்புறு வண்ணமாயிருக்கின்றனர். 1758-௵ செப்டம்பர் ௴ 29-ம் தேதி நார்போல்க் (Norfolk) மாகாணத்தின்கண் உள்ள 'பரணஹாம தோர்ப்' (Purnham Thorpe) என்ற ஊரில் பிறந்தார். இங்ஙனே இவருடைய தகப்பனார் ஓர் தேவாலய மடாதி பத்தியத்தை வகித்து உஜ்ஜீவித்து வந்தார். 'சக்லிங்' (Suckling) என்ற சிறப்புப் பெயர் வாய்ந்த இவருடைய தாயார் ஆங்கில நாட்டு அமாத்தியருள் அதிக வல்லவரான 'ஸர் ராபர்ட் வால்போல்' (Sir Robert Valpol) என்பவரின் மூத்த சகோதரியின் மருமகளாதலின் உயர் குடிப் பிறப்பின் மாட்சிமையடையப் பெற்றவள், மதலைப்பருவத்தே மன உறுதியும், ஊக்கமும் இயற்கையாய் அமையப் பெற்றிருந்தனனென இவரைப் பற்றி ஒரு சிறு கதையுண்டு. சிறு பாலகனான நெல்சன் ஒருநாள் விளையாடிக் கொண்டிருக்கையில் வீட்டை விட்டு வெகு தூரம் வெளியே திரிந்து ஓரிடையனைப் பின்பற்றிச் சென்று அவனோடு பட்சிகள் கூண்டைக் கண்டு பிடிக்க வெண்ணங்கொண்டான். அமுதுண்ணும் அமயத்திற்கு குழந்தை வரக்காணோமே என்ற ஏக்கங்கொண்ட பெற்றோர்கள் நாடோடிகள் எவரேனும் தம் அருமைப்புதல்வனை இட்டுக்கொண்டு போய்விட்டார்களோவென ஐயமுற்று அசைவற்ற பாவைபோல் நின்று மனக் கலக்க மெய்தினர், அக்கணமே இல்லத்தைத்துறந்து புறம்போந்து தேடிக்கொண்டு வருமளவில் "நீல நதிச்சூரன் நெல்சன்" (Hero of the Nile) எனப் பெயர் பெற்று விளங்கப்போவோனாகிய தங்கள் சேயைக் கண்ணுற்ற சமயம் குறுக்கிட்டோடும் சிற்றாற்றை எவ்வாறு கடக்கலாமென்று ஆலோசனையில் ஆழ்ந்தவனாய் அமர்ந்திருந்தனன். மனையை வந்தடைந்ததும், இவனுடைய பாட்டியார் பார்த்து "குழந்தாய்! பசியும் அச்சமும் மேலிட்டு வீட்டுக்கு வரவேண்டுமென்ற வெண்ணம் உதிக்கவில்லையோ" வெனக்கேட்டதற்கு அச்சமென்றபதத்தையே நான் கேட்டறியேன் அஃதென்னவென சொல் என்று விடை பகர்ந்தான். இத்தகைய சொல்லில் வல்லவனையும், அஞ்சாதவனுமாகியவனை வெல்லல் யார்க்குமரிது என்பதை நாயனாரும் "சொலல்வல்லன் சோர்விலனஞ்சானவனை இகல் வெல்லல் யார்க்குமரிது" என்று கூறியதையும் காண்க. 'விளையும் பயிர் முளையிலே, என்றபடி பிற்காலம் பிரசித்தமான வெம்போர்களில் ஜய சீலனாய் விளங்க சுத்த வீரனுக்குரிய இலட்சணங்கள் இவனிடம் சிறு பாலகனாகவிருக்கையிலேயே இயற்கையாய் அமரப் பெற்றான். ஒன்பது வயது நிரம்பவும் இவனுடைய தாயார் உயிர்துறந்தாள். அப்போது இக்குடும்பத்திற்கு நேரிட்ட துன்பத்தை ஒருவாறாற்றக்கருதி இராஜாங்கக்கப்பற் படையில் (Royal Navy) சேர்ந்து தக்க உத்தியோகத்திலமர்ந்திருக்கும் இவனுடைய தாய் மாமன் 'சக்லிங்' (Suckling) என்பவர் இவண் விஜயஞ் செய்தகாலத்து பிள்ளைகளில் யாவரேனும் ஒருவனை தம்பால் விடுக்க நெல்சனுடைய தகப்பனாரை வேண்டிக்கொண்டனர், குழந்தை நெல்சன் கடல் யாத்திரை செய்யவும், போர் கப்பல்களிற் ஏதேனும் ஒரு வேலையில் அமர்த்தவும் தக்க தேகவலிமை வாய்ந்தவனல்லனென கண்ணுற்று அவனை தன்னோடு இட்டுக் கொண்டு போக மனமில்லையென அவனுடைய தாய் மாமன் பகர்ந்தான். இப்பாலகனோ ஒரு சிறு படகு யொன்றைச் செய்துகொண்டு தன் மாமன் ஏறிச் செல்லும் கப்பலின் பெயரை அதற்கமைத்து தகப்பனார் மடத்தினருகாமையிலுள்ள தடாகத்தின் மீது செலுத்தி விளையாடி தான் கற்ற அல்லது கேள்வியுற்ற கப்பற் போர்களைக் குறித்துச் சிந்தித்துத் தானும் இவ்வாறு கப்பற் போர் வீரனென

பெயர் படைத்து புகழ் பெருவதெக்காலமோவென எக்கங்கொண்டிருந்தான். நெல்சனும் அவனுடைய சகோதிரன் உவில்யமும் தம் மாகாணத்திற்குச் சேர்ந்த 'வடவால்ஷம்' (North Walsham) என்னும் ஊரிலுள்ள ஓர் கல்லூரியில் கற்கச் சென்றுர்கள். இங்ஙனே நெல்சன் தோழர்கள் தன் வன்னெஞ்சத்தையும், வீரத்தன்மையும் கண்டு பிரமிக்கும் வண்ணம் சில சாகஸச் செயல்களைச் செய்தான் ஆசான் தோட்டத்தில பையன்கள் கண்ணைக்கவர்ந்து வாயில் தண்ணீர் ஊரும்படியாக ஒரு செடியில்பேரிக்காய்கள் பழுத்துத் தொங்கிக்கொண்டிருந்தன. மாணவர்கள் அவற்றைப்பறித்துக் களிப்பாற உண்ண தங்களுக்குரிமை யுண்டென வகித்து எவ்வகையேனும் அவ்வாறு செய்யத் துணிந்தார்கள். ஆனல் அது இருந்த இடமோ தங்களில் எத்தகைய சூரனும் துணிவொடு சென்று பறிக்கக் கூடாத அவ்வளவு அபாயகரமாக விருந்தது. அச்சமென்பதைச் சிறிது மறியாக்கன்னெஞ்சம் படைத்த நெல்சன் ஆசான் அகத்திலுள்ள ஒரு அறையின் பல கணியினின்று இரவில் கயிற்றைக் கட்டியிறங்கி கை கொண்டளவு பறித்துக் கட்டிக்கொண்டு தன் தோழர்கள் தன்னை மேலே யிழுக்க சடுதியில் வெளியேறி அவற்றை யெல்லாம் அவண் கூடியிராளின்ற தன் கூட்டாளிகளுக்கு பங்கிட்டு விட்டு தான் அதில் ஒன்றேனும் அங்கீகரித்துக் கொள்ளவில்லை. மற்ற பிள்ளைகள் இதனைக்கண்டு வியப்புற்று நிற்கையில் பெருந்தகை நெல்சன் அவர்களை நோக்கி உங்களால் முடியாதென்று எட்டாப்பழத்திற்குக் கொட்டாவிவிட்டு மரத்தை அண்ணாந்த வண்ணமாயிருந்தமை பற்றி இதை எவ்வாறேனும் செய்து முடித்து உங்களை திருப்தி செய்யவேண்டுமென அவாமேலிட்டுச் செய்தேனே ஒழிய இக்காரியம் நன்றெனக்கருதி இயற்றினவனல்லனென்ன உதட்டை மடித்து முகஞ்சுளித்து முறுவல் செய்தோதினன். இவற்றால் பெருமையுடையோர் அருமையுடைய செயல்களைச் செய்வர் என்பதை விளக்கிக் காட்டினர். இக்கருத்தை நாயனரும் தம் திருக்குறளில்.

"பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்."

என்று கூறியிருத்தலையும் காண்க. கிறுஸ்தவப் பண்டிகை விடுமுறை நாட்களைக் கழிக்க தங்கள் தகப்பனரோடு ஊரில் சில நாட்டங்கி இருந்து மறுபடியும பள்ளிக்கு புரவியின் மீதேறிக்கொண்டு நெல்சனும் அவன் சகோதிரன் உவில்யமும் புறப்பட்டுப் போகையில் பாட்டையிற் பனி படர்ந்திருந்ததை உவில்யம் கண்டு கடக்க முடியாதென்று உன்னி நெல்சனை நோக்கி முன்னேக்கிச் செல்வது முற்றிலும் அபாயமெனவும் இல்லத்தையடைவது நல்லெனவும் நவின்றனன். மனையை வந்தடைந்த செய்தி கேள்வியுற்ற அவர்கள் தந்தை ஐயமுற்று தம் மைந்தர்களை மறுபடியும் ஒரு முறை புறப்பட்டுப் போய்பார்த்து பாட்டை கடக்க முடியா அவ்வளவு கெட்ட நிலைமையில் இருந்தால் போகாமல் திரும்பி வந்து விடலாமென்று சொன்னர். இவ்விஷயத்தில் உங்கள் சொன்னாணயத்தையும், மனசாட்சியையுமே அத்தாட்சியாகக் கொள்வேனென வற்புறித்துக் கூறியனுப்பினர். இருவரும் இன்னொரு முறை விரைவாகத் தம் துரகங்களின் மீது எறிச் செல்லுகையில் பனி படர்ந்த நெறியை மறுபடியும் நோக்கி மனந்தளர்ந்தவனாய் தம்பி நெல்சனைப் பார்த்து திரும்பிப் போவோம் வா என்று உவில்யம் கேட்க அஞ்சா நெஞ்சமுடைய நெல்சன் நகை முகங்கொண்டு நன்று, நன்று, நம்மை நம்பி, நம் தந்தை அறைந்ததை நீ யறியாயோ. இயன்றளவு முயன்றுச் செல்வதே தகுதி யெனத் துணிந்து கடக்கவே தங்கள் உறைவிடம் க்ஷேமமாய் வந்தடைந்தார்கள். இவற்றால் தொழில் முயல்பவன் எவ்வகை இடுக்கணுறினும் மனங்கலங்காது அஃதை முடித்தலால் உண்டாகும் மனவெழுச்சியைத் தான் தலையாக்கொள்வன் என விளங்கிற்று, இக்கருத்தை நாயனரும்,

"இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்."

என்று விளம்பியுளர். பாடசாலை விடுமுறைக்காக இன்னொருமுறை மூடப்படவே சகோதிரர்கள் இருவரும் 'பர்ன்ஹாம் தோர்ப்' என்ற தம் பதியை நாடிச் சென்றுர்கள். அக்காலத்தில் தங்கள் தந்தை தன் தேகக்கூறு வேறுபாடடைந்து வருவதை ஒருவாறுற்றக்கருதி ஊரைவிட்டு 'பாத்' (Bath) என்ற ஓர் உத்தமமான ஆரோக்கிய பதியையடைந்து அங்ஙனே இயற்கையாய் இளவேனிற்காலத்தில் வீசும் சுத்தமான காற்றை உட்கொள்ள உவகை பூத்தார். ஒரு நாள் சமாசாரபத்திரிகை ஒன்றில் எட்டெட்டுபீரங்கிகள் ஏற்றப்பட்டுநின்றுளிரும் 'இரேஜினபிள்' (Rasionable) என்ற ஓருமை மரக்கலாதிபத்தையடைந்தனரென அறிந்து Horatio Nelson தன் தமையனை நோக்கி தனக்குக் கடல்யாத்திரை செய்ய மாமனேடு போவதற்கு தகப்பனருக்குஎழுதி எவ்வாறுவது அனுமதி வாங்கித் தரவேண்டுமென வெகுவாய் மன்றாடிக் கேட்கவே அவனுமதற்கிசைந்து 'பாத்' என்னும் ஊரிலுள்ள தங்கள் பிதாவுக்கு பத்திரகை ஒன்றை வரைந்தான். தன் மைந்தனின் மன உறுதியையும், தீவிர வைராக்கியத்தையுமுணர்ந்த அவன் தகப்பனர் எவ்வகை அலுவலில் அமரவேண்டுமென அவனுக்கு அவாவிருந்த போதிலும் அதினிலேற்றம் பெறவாற்றலடையச் செய்யவேண்டுமென விருப்புற்றனர். என்றாலும் இச் சாகர சாகஸத்தொழிலை யேற்கொள்ள கொண்ட கொள்கை மதலைப் பருவத்து மடமைத்தனமென மதித்தார். தன் உயிர்த்தோழியின் சகோதிரனை 'சக்லிங்' என்பவரும் வேலையின்கண் வெம்போர்புறிய மெல்லிய மெய் பூண்ட நெல்சனலாகாதென முன்னமே பன்னியுளர். பெருந்தன்மையும், ஆராய்ச்சியு முள்ள

பாலகன் நெல்சனே அவ்வாரதியிலேயே தன்வாணாளைக் கழித்துப் புகழ்படைத்து பலபேரறிய இராஜாங்க பத்திரிகையிற் தன் பெயர் பிரசுரிக்கப்பட்டு பொலிவுற்றுவிளங்க உழலவேண்டுமென உன்னியிருந்தனன். அவனவன் விருப்பத்தின்படியே விட்டு விடுவது தகுதியென தீர்மானங்கொண்டு அவன் தகப்பனார் கப்பற் போற்றொழிலைக் கற்றுவர 'சக்லிங்' என்பவரிடம் சேர்ப்பிக்க விருப்புற்று இருளும், குளிரும் கவிந்த வசந்தகாலத்தன்று ஒரு வேவுகாரனை விளித்து "வடவால்ஷம்" பாடசாலையிற் படித்தவரும் பால்ய நெல்சனை இட்டுக்கொண்டு 'மெத்வே' (Medway) துறைமுகத்தில் உள்ள மரக்கலத்திலமர்த்திவிட்டு வர ஏவினார். தன் உடன்பிறந்தானும், விளையாட்டுத் தோழனுமான உவில்யம் என்பானையும், கல்விக்கழகத்துக் கூட்டாளிகளையும் விட்டுப் பிரிய காலங்கிட்டிற்றேயென விசனமுற்று, கண்களிற் கண்ணீர் ததும்ப அவர்களிடம் விடைபெற்று வந்தவகை கன்னெஞ்சனும் கண்டு உருகத்தக்கதாக விருந்தது. நட்பைப்போல் சம்பாதித்தற்கரிய பொருள் உலகத்தில் எவை உளதென விளக்க நாயனாரும்

"செயற்கரிய யாவுள நட்பினதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு."

என்றும், அதினும் இளமைப்பருவத்தில் இளைஞர்கள் களங்கமின்றி உள்ளன்பொடு உண்மையாய் உவந்து கூடும் நட்பைப்போல் முதுமைப் பருவத்து பொச்சாப்பு, பொறாமை பெருமோசம் என்ற தீக்குணங்கள் குடிகொண்டு ஜீவகாருண்ணிய மென்ற க்ஷீரம் வற்றியகாலத்து ஒருவரோடுவர் செய்துகொள்ளும் நட்பு மனதில் வேரூன்றுமல சீர்செட்டுச் சிதையுமென்பது தெற்றென விளங்கும். இளமையின் நட்புமாத்திற்பூத்த பூவைப்போல முகமலர்ச்சியுடையதெனவும், முதுமையின் நட்பு குளத்தில் பூத்த பூவைப்போல முகம் குவிக்குந் தன்மையுடையதெனவும் நாலடியில்,

"கோட்டுப்பூப்போல மலர்ந்து பிற்கூம்பாது
வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட
கயப்பூப் போன் முன்மலர்ந்து பிற்கூம்புவாரை
நயப்பாரு நட்பாரு மில்."

என்று சொல்லி யிருத்தலையும் காண்க. நெல்சன் தந்தை தன் அருமைக்காதலனோடு இலந்தன் மாநகருக்குப் போந்து 'சத்தாம்' (Chatham) பட்டணத்திற்குச் செல்லும் தபால்வண்டிக்குச் சத்தம் பேசி நெல்சனை அதிலிருத்தி புறப்படடுப் போய்வர ஆசிகூறித் திருப்பித் தம் ஊர் வந்தடைந்தார். இச்சத்தாம் என்னும் தேயம் தனக்குப் புதுமையானது பற்றி தான் போய்ச்சேரவேண்டிய கப்பல் எங்குளதோவென நெல்சன ஐயமுற்று ஏங்கித் திகைத்து திசையறியாமல் அலைவதை ஒரு சீமான் கண்ணுற்று அவனை விசாரித்து இன்னானென்ன உணர்ந்து தன்னில்லத்திற்கு இட்டுக்கொண்டுபோய் உண்டி முதலியவைகளைக் கொடுத்துபசரித்து "இரேஜினபீள்,' என்ற கப்பல் நிற்குமிடத்தையும் காட்டியனுப்பினார். அவன் அக்கப்பல் நிற்கும் துறைக்குக் கடுகிச்சென்று அஃதினுட்பிரவேசித்து கப்பற்றலைவனை எங்கேயென விசாரிக்குமளவில் எங்ஙனமுற்றனோ எங்களுக்குத் தெரியாதெனசாற்றவே மனக்கவலை எய்தினனாய் மெல்ல மேற்றளத்தின் மீதேறி சுற்றிப் பார்த்துக்கொண்டு அங்கேயே இருந்துவிட்டான். ஒருநாள் முழுமையும் பட்டினியாய் கேட்பாரின்றி காலங்கழிக்க மறுநாள் இவன் பரிதாபநிலையை சிலர் கண்ணுற்று இரக்கங்கொண்டார்கள். கடல்போர்களில் வல்லோனாய் பெரும் புகழ்பெற அடல்வாய்ந்தோனும், தாயற்ற சேயும், உரோசமுள்ள உணர்ச்சியுடையோனும், மெல்லிய மேனியையுடையோனுமான நெல்சனை இக்கப்பற் போர்வீரர் உபசரித்தவகை அவனதுள்ளத்தைவிட்டென்றுமகலவில்லை. தான் தக்க வதிகாரத்தை வகித்தகாலத்து தனக்குட்பட்ட உயுத்த வீரர்களை ஊக்கமுடனும், உள்ளன்போடும், உழைத்துவரச் செய்து ஆழாழியின் ஆதிக்கம் ஆங்கிலநாடு அடையும் வண்ணம் மெய்வருந்தி முயன்றனர். மேலும் தான் இத்தொழிலின் துவக்கத்தில் துன்பத்தையனுபவித்தவனாதலின் இனி இத்தொழிலை மேற்கொள்பவரை உற்சாகமாயிருக்கச் செய்யவேண்டுமென்று அவர்களுக்குத் துன்பம் நேரிட்ட விடத்து தேற்றிவருவாராயினர்.

ஐபீரியா (Spain) நாட்டுக்கும் ஆங்கில நாட்டுக்கும் 'பாக்லண்ட்' (Falkland) தீவுகளைப்பற்றிய விவாதம் முடிவுபெறவே அதினிமித்தமனுப்பப்பட்ட 'இரேஜினபிள்' கப்பலில் அமரப்பெற்ற போர் வீரர் பரிசுபெற்றுப் பிரிந்துபோயினர்.

ஆலசியமற்ற நெல்சன் வேலையில்லாமல் வீண்காலம்போக்க மனமின்றி தன் மாமனுடன் சமானனாசிருந்து வேலைபார்த்துவந்த "ஜான் இராத்போன்" (John Rathbone) என்பவர் ஒரு வாணிபமரக்கலதிபனாய் மேற்கு இந்திய தீவுகளுக்கு (West Indies) புறப்படுகிற செய்தியறிந்து அவனோடு தானும் கூடச்சென்றான். ஏதோ காரணத்தாற் கப்பற்றொழிலில் வெறுப்புற்ற இராத்போன் இளைஞன் நெல்சனும் இக்களங்க குணத்தையே கைக்கொள்ளும்வண்ணம் கழறினர். இவரிடமிருந்து மாலுமி சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றோனாயினும் மன்னர் மரக்கலப்படையிற் பணிவிடைசெய்ய மனவெறுப்பெய்தினன். 'சக்லிங்' என்பவர் "ஜயக்கலம்" (Triumph) என்ற தமது கப்பலில் தன் மருகன் நெல்சனை அமர்த்திக்கொண்டு அவன் கொண்டகளங்ககுணத்தையும் களைந்தார். இக்கப்பல் காப்புகப்பலாக தெளிந்த புனலும், தடங்கரையும் பெற்றொளிரும் தெம்ஸாற்றின்மீது தங்கி இருந்தது. இங்கனமிருந்து மாலுமிவேலையை நெல்சன் தன்னாலியலுமளவு பயில முயலுவானாயின் 'சததாம்' பட்டணத்துப் படைக்கலமொன்றில் படைவீரனுக்கருகாமையிலுள்ள படகுக்கதிபனாக அமர்த்துவதாக அவன் மாமன் அறைந்தான். இதைக்கேட்டு அள

வற்ற ஆனந்தங்கொண்டு நெல்சன் அவ்வாழியைச் சுற்றுப்பிரயாணஞ் செய்து ஆங்காங்கு கண்ணுக்குத் தென்படும் மணல் வெளிகளையும், பாறைகளையும் கவனமாய் மனதில் பதித்துக்கொண்டு பயமின்றி கப்பலைச் செலுத்தத் துணிவுபெற்முன். மேன்மேலும் விருத்தியடைந்து மாலுமி சாஸ்திரத்தில் மாட்சிமையடைய மனங்கொண்ட நெல்சனுக்கு வேலையின்றி சும்மா நிற்கும் 'ஜயக்கலத்திலுமர்ந்திருக்க ஊக்கமும் உவப்புமற்றிருந்தான். நீடாழியின்மீது இருமரக்கலங்கள் புதிய நாடுகளைக்கண்டு தேடிவா வடதுருவத்தை நோக்கிப் புறப்படுகிறதென்று கேள்வியுற்ற பாலன் நெல்சன் தானும் பிறத்தேயங்களைப் போய்பார்த்துவர அவாமேலிட்டோனுகி தன் மாமன்பால் ஏகி அனுமதிபெற்று அவாது செல்வாக்கால் கப்பலதிபனுக் கடுத்தஸ்தானத்தில் உள்ள ஒரு உத்தியோகஸ்தனிடத்தில் ஒரு சிறு படகுக் கதிகாரியாகப் போயமர்ந்தான். இந்த கப்பற்படை "நோர் (Nore) எனற துறைமுகம்விட்டு 1773ஹூ ஜூன்மீ 4-ம் தேதி பாய்மரங்களை விரித்துக்கொணடு புறப்பட்டது. போகும் பாட்டையிற் பலவகை இடுக்கண்களுறினும் கலங்கா நெஞ்சம் படைத்த நெல்சன் அவற்றைச் சிறிது மோராமல் உல்லாசமாகவே இருந்தான். மூடுபனி முற்றும் செறிந்த "ஸ்பிட்ஸ்பர்கன்" (Spitzbergen) என்ற தீவைச்சார்ந்ததும் இங்கனம் தங்கியிருக்க இயலாதென உன்னி கப்பற்றலைவன் வேறேதேனும் ஒரு துறையைக்கண்டு தனக்குத் தெரிவிக்கக் கப்பலாட்களைச் சிலரை எவ நெல்சனும் மனக்கிளர்ச்சி எய்தி மரக்கலமொன்றில் ஏறிக்கொண்டு புறப்பட்டான். முந்திச்செல்லுகின்ற கப்பலாட்களை கடற்குதிரைக்கூட்டங்கள் வீராவேசத்துடன் வந்து தாக்கத் தன் படகை வேகமாய் நடத்தி விரைந்து சென்று அவ்விலங்கினங்கள் ஓலமிட்டோடச் சிதறடித்து கப்பலில் உள்ளவர்களை நெல்சன் காப்பாற்றினன். ஒருநாள் இரவில் அவன் ஒருவருமறியாமல் கப்பலைவிட்டகன்று புறம்போந்தனன். மறுநாள் வைகரையில் ஒரு பெருங்கரடியொடு கைகலந்து அமர்புரிந்து கைத்துப்பாக்கியை அடிப்புறம் திருப்பி அதை அடிக்க இருக்கையில் கப்பலில் உள்ளோர்கள் கண்ணுற்று அம்மிருகம் மருண்டு திடுக்கிட்டோட துப்பாக்கியைச் சுட்டார்கள். கப்பற்றலைவன் நெல்சனை நோக்கி என் இவ்வபாயகரமான சண்டையைச் செய்யத் துணிந்தாய் என்று கண்டித்துக்கேட்க தான் அந்த கரடியைக் கொன்று அதன் தோலை உரித்தெடுத்து ஊரையடைந்ததும் தந்தை கையிற் கொடுக்கவேண்டு மென்றிருந்தேனென விடைபகர்ந்தான். இவ்வரும் மரக்கலங்கள் ஆங்கிலநாடு நண்ணியதும் மாலுமிகள் அனைவர்க்கும் மரியாதை செய்தனுப்பவே, தாளாண்மையை தலையாகக் கொண்ட நெல்சன் குணதிசை நோக்கிச்செல்லும் 'கடற்குதிரை' (Seahorse) என்ற ஓர் கப்பலையடைந்தான். இக்கப்பலதிபன் இவன் நற்குணங்களையும், நன்னடக்கைகளையும் கண்டு வியந்து கப்பலில் பால்ய உத்தியோக (Midshipman) அந்தஸ்தை வகிக்க உதவிபுரிந்தான். கடல் யாத்திரையில் கைதேர்ந்து தேகவலிமையையும் பெற்முன். கீழ்த்திசையை நோக்கி நெடுந்தூரம் பிரயாணஞ்செய்து இந்தியாவரையிலும் வந்தடைந்தான். இங்கனே பதினெட்டு மாதம் தங்கியிருக்க நேரிட இப்பிரதேசத்தின் பகலவன் கொடுங்கிரணங்களின் தாபத்தால் தபிக்கப்பட்டு தேகமெலிவுற்று நெல்சன் காயலாவானுன். வரவா தேகவாரோக்கியம் சீர்கெட்டு வந்தமைபற்றி ஊருக்குத் திரும்பிப்போக அவாமேலிட அப்போது ஆங்கிலநாட்டுக்கு பிரயாணமாயிருந்த "சாகரச்சுரு" (Dolphin) என்ற கப்பற்றளகர்த்தன் வசம் ஒப்புவிக்கப்பட்டான். அங்கமெலிந்து, அகக்கிளர்ச்சி குன்றி ஊக்கமெனு மாக்கத்தையுமிழந்தான். கப்பற்றொழிலைக்கற்று ஏற்றமடைய எண்ணியவெண்ணம் வீணுய்ப்போகுமோவென ஐயமுற்று அகங்குன்றினன். கண்ணகல் ஞாலம் கங்குல்கவிந்தபின் கதிரொளிவீசி விளங்குமாபோல் அங்கம் கலங்கிய நெல்சன் உள்ளம் பொங்கி பொலிவுற்றது.

இதனுல் தன் தேசாபிமானமெனும் செஞ்சுடர் கொழுந்து விட்டெரிய "நான் சுத்தவீரனுவேன். என் தேசமும், தேசாதி பனுந்தான் எனக்குற்ற நண்பரும், உபகாரிகளும்" என்று தனக்குள் எண்ணலானுன். இக்கோள்கை பசுமரத்தில் ஆணி அறைந்தாற்போல் பதிந்து தான் உயிரோடிருக்கும் வரையில் உழைத்து உல்லாசமாய் காலங் கடத்தினன். கப்பற்றலைவன் அவனைப் பட்சமாய் பரிபாலித்து நோய்களைந்து ஊரில் கொண்டுபோய் சேர்த்தான். தன் மாமன் கப்பற்படைவிசாரணைகர்த்தா (Comptroller) வாக நியமனம்பெற்ற செய்தியறிந்து மகிழ்ச்சியடைந்தான். ஜிப்ரால்டர் (Gibraltor) க்குப்போகும்ஊர்ஸெஸ்டர் (Worcester) என்ற உயுத்தசப்பலில் உதவி உத்யோகஸ்தனுக (Ag: Lieutenant) நெல்சன் நியமனம் பெற்முன். 177 ஹூ ஏப்ரல் மீ பதில் உத்தியோகம் பரிட்சையில் தேறவே சமாக்கா (Jamaica) நகருக்குச் செல்லும் ஓர் மரக்கலத்தில் அமர்ந்தான். ஆங்காங்கு அமர்புரிந்து ஆங்கிலம் ஆழியாட்சியடைந்து பொங்கிப்பொலிவுற்று விளங்க நல்லிசை நாட்டிய நெல்சனை ஆங்கிலேயர்இன்றளவும் போற்றிய வண்ணமாய் இருக்கின்றனர். நீலநதிச் சண்டை' (Battle of the Nile) செய்ய புறப்படுகையில் தன் சைன்னியங்களை பார்த்து "நாளை நான் இப்போரில் வென்முல் 'பியர்' (Peer) என்ற பிரபுப்பட்டம் பெறுவேன். இன்றேல் வெஸ்ட்மினிஸ்டர் இடுகாட்டில் அடக்கம் பெறுவேன்" எனப்பகர்ந்தான். அவருக்கு இராஜாங்கத்தில் 'பாரன்' (Baron) என்ற பட்டமளித்து £ 2000 உபகாரச் சம்பளத்தையும் உபகரித்தார்கள். உயர்தரப்பட்டமளிக்க வேண்டுமென்று '(காமன்ஸ் சபையார்' (House of Commons) உத்தேசித்துக் கொண்டிருக்கு மளவில் வல்வாயனும் சபாபண்டிதனுமான

'பிட்' (Mr. Pitt) என்பவர் எழுந்து அங்குற்றோரை நோக்கி "போர்க்கப்பற் கூட்டத்தலைவன் நெல்சன் (Admirul Nelson) நாட்டிய புகழ் பிரதானியரென்ற பெயருள்ளவரை போல் உற்று விளங்கும். சரித்திரங்களில் எங்கும் கண்டும் கேட்டறியா கடுங்கப்பற் போரில் சுத்த வீரனாய் துலங்கும் இவருடைய கீர்த்தியின் ஒளி எங்கும் பரவி வீசுகையில் ஒருவரும் இவரடைந்த பட்டம் 'பாரனோ' அல்லது 'இயர்லோ' (Baron or Earl) என்று கேட்கவும் மனதில் நினையார்." என்று எத்தியம்பினர். "கோபன்ஹேகன்" (Copenhagen) என்னுமிடத்தில் தானியரோடு (Danes) கோரமான யுத்தம் புரிந்து அவர்களுடைய மரக்கலங்களை நிர்மூலமாக்கினதின் நிமித்தம் 'பியர்' என்ற பட்டத்திற்கும் சிறந்த 'வைகவுண்ட்' (Viscount) என்ற பட்டமடைந்தார். இது நிகழ்ந்து நான்காண்டுகழித்த பின்னர் "திராபல்கர்" (Trafalgar) என்ற பிரபலமான வெம்போரில் வெற்றியடைந்தார். இதில் உயிர் துறக்கும்படியான காயம் பட்டபோதிலும் வைற்றியெனு மாற்றம் காதிற்பட்ட பிறகுதான் உயிரை நீத்தனர். மேலும் எதிரிகள் மடைகலங்கி திரண்டோடுவதை காதலரோடு கண்ணுற்றார். இறக்குந் தறுவாயில் தன்னருமை மாலுமிகளை நோக்கி: "கடவுள் அருள் புரிவாராக, நான் கைக்கொண்ட கடமை முடிவுபெறச் செய்துவிட்டேன்." என்று சொல்லிக் கொண்டே உயிர் துறந்தனர். ஆங்கிலேயர் இன்றளவும் இவருடைய பெயரைக் கேட்கையிலேயே உற்சாகமும், ஊக்கமும் அடைகிறார்கள் என்ற விவரத்தைப் பின்வரும் நிதர்சனத்தால் நிதானிக்கலாம். 'கதிரவன் உதித்தெழும் பதியினோர்க்கும்,' (People of the Land of the Rising Sun i.e. Japan) உறமொன்றே உரிமையாக்கொண்ட "உருஷ்ஷியருக்கும்" உலக சரித்திரங்களில் எங்கும் கண்டும் கேட்டுமறியா கங்குல் பகலின்றி பதினெட்டுமாதம் நடந்த உக்கிரமான போரில் எப்புவியும் போற்றும் ஜப்பான் கப்பற்றலைவன் 'தோகோ' (Admiral Togo) என்பவர் ஜயங் கொண்டார். ஆங்கிலேயர் அளவற்ற ஆனந்தமேலிட்டு இவரை "குணதிசை நெல்சன்" (Nelson of the East) எனக் கொண்டாடினார்கள். இந்த அக்டோபர்மீ 21வ இவர் ஜயம் பெறப் புரிந்த டிராபல்கர் யுத்தத்தின் சதாப்த பூர்த்தியாதலால் இந்த நூருண்டுற்சவத்தை இத்தருணம் உலகெலாம் பரவியுள்ள ப்ரிடிஷ்ராஜ்யமெங்கும் பெருமையாகக் கொண்டாடுகிறார்கள். நெல்சனுடைய நாமத்தை இந்நாட்டார் இன்றளவும் போற்றுவதினால் இவர் அடைந்த கீர்த்தியின் பிரதாபம் சொல்லாமலே விளங்கும். இவரிடம் விளங்கிய போராண்மை பகைவரும் மெச்சத்தக்க பண்பினையுடையதாக விருந்தது. இக்கருத்தை நாயனாரும்:

'போராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.' என்று கூறியுளார்.

ஏ. கே. சிவராமய்யர்.

# "MERRY WIVES" OF MODERN IND.

[AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

(*By S. Ramaswami Aiyar, B.A.*)

# கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

## இந்நாடகத்தின் வேஷதாரிகள்.

ராயபகதூர் பீமவர்மன்:

குணசுந்தரி,
பானுமதி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.

காமசுந்திரன்...மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.

விக்ரமவீரன்.

சேசவதத்தன்...விக்ரமவீரன், மருமகன்.

வீரசேனன்,
உக்ரசேனன், } இரண்டு சினேகிதர்கள்.

வாசலன்...வீரசேனனுடைய மகன்.

ப்ரதாபன்...சேசவதத்தனுடைய சினேகிதன். பள்ளிக்கூடத்து வாத்தியார்

பாராக்ரமன்...வைத்தியர்.

சகுணன்...ஓர் பெரிய ஹோடல்காரன்.

கருப்பன்,
முத்தன், } உக்ரசேனன் ஆள்கள்.

மார்த்தாண்டன்,
முனியன்,
வெறியன்,
வக்ரன், } பீமவர்மனுடைய ஆள்கள்.

சுசீலன்...சேசவதத்தனுடைய வேலைக்காரன்.

வீரன்...பாராக்ரமனுடையவேலைக்காரன்.

பானுமதி...உக்ரசேனன் பெண்சாதி.

குணசுந்தரி...வீரசேனன் பெண்சாதி

மோகனமாலை...வீரசேனன்பெண்; காமசுந்திரன் பேரில் காதல்கொண்டவள்.

பத்மினி...பாராக்ரமன் சமையற்காரி.

### காக்ஷி. 6.

சுகுணன் ஹோடலில் மற்றொரு அறை.

காமசுந்திரன், சுகுணன் வருகிறார்கள்.

**சுகுணன்:**—காமசுந்திரா இனிமேல் நீ என்னோடு ஒன்றும் சொல்லவேண்டாம். என் விசாரம் எனக்குப் பெரிதாக இருக்கிறது எது எப்படிப் போனால் எனக்கென்ன. என் குதிரைகளும்பணங்களும் போனது இனி வரப்போகிறதா.

**காமசுந்திரன்:**—நான் சொல்வதைக் கேள். எனக்கு மட்டும் நீ இந்த சமயத்தில் ஒத்தாசை செய்தால், நான் உன் நஷ்டத்தை யெல்லாம் கொடுத்து விடுகிறேன். நீ இந்த சமயத்தில் என்னை கைவிடக்கூடாது.

**சுகுணன்:**—ஆனால் உன்னுடைய காரியத்தை சொல் எப்படி யிருந்தாலும் செய்கிறேன்.

**காமசுந்திரன்:**—நான் உனக்கு அடிக்கடி எனக்கு மோகனத்தின்பேரில் இருக்கிற ஆசையை சொல்லியிருக்கிறேன். அவளும் என்பேரில் பிரியம் வைத்து எனக்கு கடிதம் எழுதியிருக்கிறாள். அதை பார்த்தால் நீயே ஆச்சரியப்படுவாய். பீமவர்மனுக்கு இன்னுமொரு பெரிய தமாஷ் இருக்கிறது. அத்துடன் எங்கள் தமாஷாக நடக்கப்போகிறது (கடிதத்தை காண்பித்து) இதோ பார் கடிதம் இதைப் பிறகு உனக்கு சாவகாசமாய் காண்பிக்கிறேன். அன்றைக்கு ராத்திரி இந்த ஊர்மைதானத்தில் ஆலமரத்தடியில் என் மோகனம் பிசாசுகளுக்கு ராணிபாக வேஷம் போட்டுக்கொண்டு வரப்போகிறாள். என் காரியத்தை சொல்லப்போகிறேன். கவனித்துக்கேள். இன்று ராத்திரி 1-மணிக்கு நல்ல வேளையாம். அவள் தகப்பனார் இந்த வேடிக்கை யெல்லாம் நடந்துகொண்டிருக்கும்போதே மெதுவாய் கேசவதத்தனுடன் நழுவிப்போய் தெற்கு கோவிலில் கலியாணம் செய்துகொள்ளும்படி உத்திரவு செய்திருக்கிறார். அவனும் அப்படியே செய்ய புரோகிதர், வைதீகர்கள் எல்லாம் ஏற்பாடு செய்து விட்டான். மோகனமும் இதற்கு சம்மதித்திருக்கிறாள், அவள் தாயார் எப்போதும் இதற்கு சம்மதியாமல் வைத்யனுக்கே அவளைக் கொடுக்கவேண்டுமென்று, வைத்யருக்கும் நேரில் சொல்லி, மேல் சொன்ன விளையாட்டுகள் நடக்கும்போதே மெள்ள மோகனத்தை கூட்டிப்போய் மேற்குக் கோவிலில், கலியாணம் செய்து கொள்ளும்படி சொல்லியிருக்கிறாள். அவனும் சம்மதித்து புரோகிதர் வைதீகர்கள் எல்லோருக்கும் சொல்லி ஏற்பாடு செய்து விட்டான். இதற்கும் மோகனம் சம்மதித்திருக்கிறாள். இதில் ஏற்பாடு எப்படி யென்றால், அவளை வெள்ளை உடுப்புடன் கண்டுபிடித்து கேசவதத்தன் தொட்டதும் இந்த அடையாளத்தைக் கண்டு, மோகனம் கூடப் போய்விட வேண்டியதென்று தகப்பனார் ஏற்பாடு செய்திருக்கிறார். அவள் தாயார் வைத்யருக்கு சொல்லியிருக்கிற தென்னவென்றால் பச்சை உடுப்புடன் மோகனத்தைக் கண்டு அவள் கையைக் கொஞ்சம் குத்தின உடனே கூடப்போகவேண்டுமென்றும் திட்டம் செய்திருக்கிறாள்.

**சுகுணன்.**—அவள் யாரை ஏமாற்றப்போகிறாள்? தகப்பனையா தாயையா.

**காமசுந்திரன்:**—இருவரையும் ஏமாற்றப்போகிறாள், என்னுடன் வரப்போகிறாள். எப்படியென்றால், பராசரமனும், கேசவதத்தனும் அவர்களுக்கு சொன்னவார்த்தையை கவனிக்கவில்லை. மோகனத்தை வெள்ளையுடுப்புடனும், பச்சையுடுப்புடனும் தாங்கள் வந்து கூட்டிப்போகிறதாக நினைத்திருக்கிறார்கள். ஆனால் மோகனம் சிகப்பு உடுப்புடன் வரப்போகிறாள். இந்த சங்கதியை மோகனம் எனக்கு தெரிவித்திருக்கிறாள். நானும் பத்மினியுடன் சொல்லி, வெள்ளை, பச்சை உடுப்புகள் போட்டிருக்கிற பையன்களுக்கு சொல்லிவைத்து கூடப் போகும்படி திட்டம் செய்திருக்கிறேன். நீ மட்டும் ஒன்று செய்யவேண்டும், 12-மணி முதல் 1-மணிவரையில் ஒரு புரோகிதரையும், நல்ல வைதீகர்களையும் கொண்டுவந்து வைத்துக்கொண்டு கிழக்கு கோவிலில் நீ ஜாக்ரதையா யிருக்கவேண்டும். இதுதான் நானுன்னை கேட்டுக்கொள்வது.

**சுகுணன்:**—நீ அதற்காக யோஜிக்கவேண்டாம். நான் கட்டாயம் எல்லோரையும் கூட்டிவருகிறேன். நீமட்டும் மோகனத்தைவிட்டு வேறுயாரையாவது கூட்டிவராதே.

(போகிறார்கள்.)

## 5-வது அங்கம்.

### காக்ஷி. 1.

சுகுணன் ஹோட்லில் ஓர் அறை.

பீமவர்மன்) பத்மினி வருகிறார்கள்.

**பீமவர்மன்:**—இனிமேல் நீ எனக்கு அதிகமாக சொல்லவேண்டாம். உன் யஜமானிகளுக்காகவும், அவர்களுடைய விசுவாசத்துக் காகவும் மூன்றாந்தட்வையாக இன்னுமொருதரம் பிரயாசப்பட்டு பார்க்கிறேன். எண்களில் 3க்கு எப்போதும் அதிர்ஷ்டம் உண்டென்று கேட்டிருக்கிறேன். அதை இந்தத் தடவை பரிக்ஷித்து பார்ப்போம். நான் கட்டாயம் வந்துசேருகிறேன். ஆனால் நான் கொம்புக்கும் சங்கிலிக்கும் என்ன செய்கிறது.

**பத்மினி:**—தாங்கள் அதற்காக யோஜிக்க வேண்டாம். நான் கடையில் ஒரு பெரிய வான்தலையும் நல்ல சங்கிலியும் வாங்கி உமக்கு அனுப்புகிறேன். நல்லது நான் போய்வருகிறேன் (போகிறாள்.)

உக்ரசேன் கமலாகாராக வருகிறான்.

**பீமவர்மன்:**—கமலாகாரே வாரும் என்னசங்கதி.

உக்ரசேனன்:—நான் அல்லவோ உங்களிடம் சங்கதி விஜாரிக்க வந்திருக்கிறேன்.

பீமவர்மன்:—உம்முடைய சங்கதி இன்று ராத்திரி உண்டு அல்லது இல்லையென்று தீர்ந்துவிடும். நம்ம ஊர் மைதானத்தில் ஆலமரத்தின் பக்கத்தில் நீர் இருந்தால் அங்கே நடக்கப்போகிற வேடிக்கைகளைப் பார்க்கலாம். உமக்கு ஒரு பெண்ணல்லவா சம்பாதித்துத் தருவதாக சொன்னேன். இன்றைக்கு இரண்டு பெண்கள் சம்பாதித்து உமக்குத் தருகிறேன்.

உக்ரசேனன்:—நீர் எனக்கு சொன்னபடி நேற்றைய தினம் அவளிடம் போகவில்லையா.

பீமவர்மன்:—போகாமலிருப்பேனா, போனேன். அவ்விடத்தில் நடந்த விசேஷங்களை நான் என்னவென்று சொல்லட்டும்.

உக்ரசேனன்:—என்ன, நடந்தது?

பீமவர்மன்:—நான் ஒரு கிழவனைக உள்ளே போனேன். ஒரு கிழவியாக வெளியில் வந்தேன். அந்த படவாப்பயல் இருக்கிறானே, பொறாமைக்காரப் பயல், அவனுக்கு இந்த பொறாமையிலேயே பைத்தியம் பிடித்துவிட்டது. என்னை அந்தக்கிழவி வேஷத்தில் அடியடி என்று அடித்து விட்டாள். நான் எனது சுயரூபமாக இருந்தால் அப்போது அவனை விட்டிருக்கமாட்டேன். என்ன செய்கிறது! அடியையும் பட்டுக்கொண்டு எங்கே போலீஸில் பிடித்து விடுவார்களோ வென்று பயந்து தலை தப்பினது தம்பிரான் புண்யமென்று வந்து விட்டேன். நல்லது இப்போது நான் ரொம்பவும் அவசரத்தில் இருக்கிறேன். என் கூடவே நீர் வந்தால், உமக்கு எல்லாம் விபரமாய் சொல்லுகிறேன். நான் சிறு வயதில் பள்ளிக்கூடத்துக்கு போக பயந்து ஒண்டிக் கொண்டபோதும், வாத்து திருடினபோதும் கூட இப்படி அடிபடவில்லை. நல்லது இன்றையதினம் ராத்திரி அந்த உக்ரசேனனுடைய சிநேகிதன் வீரசேனன் இருக்கிறானே, அவன் பெண்சாதியும் என்னிடம் வரப்போகிறாள். உமக்கு அங்கேயே இந்த உக்ரசேனனை ஏமாற்றி அவன் பெண்சாதியை உமது கையில் பிடித்துக் கொடுத்துவிட்டு நான்வீரசேனன் பெண்சாதியை அனுபவிக்கிறேன். இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நான் செய்திருக்கிறதை உமக்கு சாவகாசமாக சொல்லுகிறேன் வாரும்.

(போய்விட்டார்கள்.)

(இன்னும் வரும்.)

## On Devotion and Love.—To God.

## பக்தி சிரத்தை.—V

(முன் தொடர்ச்சி.)

கவிஞர்களால் பாடல் பெறாதபோதிலும் மூன்று பக்கங்களிலும் உன்னதமான மலைகளையமையப் பெற்றதும், மத்தியிலுள்ள சிகரததிலிருந்து உற்பத்தியாகிற திவ்விய நதியை ஓடப்பெற்றதும், டணாயக்கன் என்ற பாளையகாரனால் கட்டப்பட்ட பெரிய அணைக்கட்டையுடையதும், அவ்வணையிலிருந்து கால்வாய் வழியாக நிறைந்து வருஷம் முழுவதும் ஜலங்குறையாமல் வழங்குவதுமான குணங்களையுடையதும், எங்குபார்த்தாலும் தென்னை, கமுகு, மா முதலிய சோலைகளோடு இடைக்கிடை நெல் வயல்களை காணக்கூடியதுமான டணாயக்கன் கோட்டை என்ற புகழ்பெற்ற பட்டணத்தில் வசிப்பவராயும், வேதியர் குலத்தில் அவதரித்து வேத சாஸ்திர நிபுணராய், மண் பொன் என்பவைகளையும், கல் கட்டை என்பவைகளையும் அபேதமாய்ப் பார்ப்பவராயும், தினப்படி அக்கினிஹோத்திரம் செய்பவராயும், விரக்தராயும், விசேஷ சிவபக்தியுள்ளவராயும், ஸ்ரீ சுப்பிரமண்ணிய உபாசகராயும் அர்த்தநாரி என்ற நாமம் படைத்தவராயும் ஒரு பக்த சிரோமணியிருந்தார். இவர் தன் ஜீவனத்திற்கு தக்க யாதொரு தொழிலும் கிடைக்கப் பெறாதவராய் கொஞ்சகாலம் வைத்தியத்தொழிலை மேற்கொண்டு செய்து, பிறகு அதிலும் பாபத்திற்கு காரணங்களிருப்பதையும், "வாத்தியாருக்கு சொர்க்கம், வைத்தியருக்கு நரகம்" என்பதை சாதாரண ஜனங்களும் கூறுவதை அறிந்தவராய் அத்தொழிலையுமிகழ்ந்து, உபாத்திமைத்தொழிலை மேற்கொண்டு ஊரிலுள்ள பிராமணர், சூத்திரர் என்ற பேதமின்றி இருவருணத்துச் சிறுவர்களுக்கும் வித்தியாப்பியாசஞ் செய்து வந்தனர்.

பழய வாசனையால் வைத்தியஞ் செய்யவேண்டுமென்று இவரை நாடிவந்த வியாதிஸ்தர்களுக்கு இவர் யாதொரு பிரதிப்பிரயோஜனத்தையும் கருதாமல் சிற்சில ஔஷதங்களைச் செய்து கொடுத்தாராயினும் பலருக்கும் கொடுப்பது நாளடைவில் விபூதியாக மாறிற்று. கொஞ்சகாலத்தில், ஔஷதத்திற்காக எதாவது கொடுத்தாலும் வாங்காதவராகவும், விபூதியைத் தவிர வேறு மருந்து கொடாதவராகவுமாயினர்.

இவருக்கு சகல விஷயத்திலுமிசைந்த கோகிலா வென்ற ஒரு மனைவியுண்டு. இவளுக்கு எழுத்து வாசனை யில்லாதபோதிலும் கேள்வியினால் தேர்ந்த அறிவையும், நல்லொழுக்கத்தையும், சன்மார்க்கத்துவத்தையும், கொழுநனைப்பேணு முறையையும், கற்பின் சிறப்பையும் நன்றாயறிந்திருந்தாள். இவ்

வூர் வழியாக வேறு இடங்களுக்குச் செல்கிற பிரயாணிகளுக்கு இந்த அர்த்தநாரி பக்தருடைய பாடசாலையே இராத்தங்கு மிடமாகவும், நல்லொழுக்கமும், நெறிதவறாத வாழ்க்கையும், தர்மசிந்தையும், ஜீவகாருண்ணியமுமுள்ள இவருடைய வீடே அன்ன சத்திரமுமாய்க் காணப்பட்டது.

இவரிடத்தில் அவ்வூர் பிரஜைகளுக்கு அதிக விஸ்வாசமும் மதிப்புமிருந்தபடியால் இவர் பாடசாலையில் கற்கும் மாணாக்கர்களை மாதசம்பளம் கொண்டுவாருங்கள் என்று உத்திரவு செய்து வசூல் செய்வது குறைந்து, பிள்ளைகளின் பெற்றோர்கள் தாமாகவே தவறாமல் கொடுத்தனுப்பிக் கொண்டுவந்தார்கள்.

இவருக்த வெகுகாலம் சந்ததியில்லாதிருந்து இவருடைய 35-ம் வயதில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பெற்றோர் அதிக சந்தோஷமடைந்தவர்களாய் மகனுக்கு நாகமணி என்று பெயரிட்டு அன்போடு வளர்த்து தக்க பருவங்களில் விதயாப்பியாசம், உபநயனம் முதலியவைகளைச் செய்வித்து வேதாத்யயனம் சற்பிக்கவேண்டிய தொழிலையும் தகப்பனாரே மேற்கொண்டனர்.

நாகமணி வரவர கல்வியில் தேர்ந்து வந்ததுடன், நல்லொழுக்கம், ஈஸ்வரபக்தி முதலியவைகளிலும் பழகி வந்தான். இந்த ஊரில்தான் அந்தரப் பிள்ளையார் என்ற கோவிலிருந்தது. இந்த விநாயகர் கற்பகிரகத்தில் பூமிக்கு இரண்டடிக்கு மேல் நிற்கும். இக்காரணத்தைக்கொண்டே மகா சக்தியுள்ளதென்று எண்ணப்பட்டு உற்சவாதிகளும் பூஜை நைவேத்தியங்களும் வெகு ஆடம்பரமாய் நடந்துக்கொண்டு வந்தது. நமது நாகமணி இவ்வாலயத்திற்கு நாடோறும் காலையிலும் மாலையிலும் தப்பாமற்சென்று ஸ்தோத்திரங்களைக் கூறி நமஸ்காரஞ்செய்து பணிந்து திரும்புவான். தகப்பனார் இவனுக்கு அடிக்கடி சன்மார்க்கப் போதனைகளையும், ஈஸ்வரபக்திக்குரிய சரித்திரங்களையும் கூறுவார். அதிக உருக்கமாகச் சொல்லிக்கொண்டு வருவதை கவனமாய்க் கேட்டுக்கொண்டு வருகிறவனாதலால் சோகமான விடங்களில் தாரை தாரையாகக் கண்களில் நீர் பெருக்குவான். ஆச்சரியமான விடங்களில் ரோமக்கூச்சும் புததிமயக்கமுமடைவான். ஞானமும் பக்தியும் கூடியவிடங்களில் பெருமூச்சும் கொட்டாவியும் விட்டு நடுநடுங்குவான். தகப்பனார் இவைகளைக் கண்ணுற்று ஆனந்தமுறுவார்.

பதினைந்து கழிந்து பதினாறாவது வயது நடக்கிற இவ்வாலிபனை பாடசாலையிலுள்ள ஒவ்வொரு மாணாக்கனும் கண்டு பேசவேண்டுமென்ற ஆவல் கொண்டவர்களாய், நான் முந்தி நீ பிந்தி என்று வழக்கிட்டு இவனிடம் சென்று பேசுவார்கள். பிள்ளைகளின் பெற்றோர்களு மிப்படியே இவனிடத்தில் அன்புள்ளவர்களாயிருந்தார்கள். இவைகளுக்குக் காரணமாய் நாகமணியிடத்தில் கல்வியறிவும், நல்லொழுக்கமும்; சுசியாசார பக்தியு மிருந்ததற்குத் தக்கவாறு அங்க இலக்ஷணமும், முகக்களையும், லக்ஷ்மீகடாக்ஷமும் ஜொலித்துக்கொண்டிருந்தன.

தகப்பனார் அர்த்தநாரி உபாத்தியாயரிடத்திலேயே நமது நாகமணி வேதபாடமுதலியவைகளைக் கற்றுக்கொண்டு வந்தானாகையால் ஒருநாள் அப்பாடவிஷயத்தில் தகப்பனார் சிறிது கோபங்கொண்டார். புதல்வர் அதற்கு மனத்தாங்கல் கொண்டவராய் சாயந்திர வேளையில் வீட்டைவிட்டு வெளிப்பட்டு எங்கேபோய் ஒளித்துக் கொள்வோமென்று ஊருக்கருகே யிருக்கிற ஒரு காட்டையடைந்து, அதனடுவில் பாழடைந்து மண்ணிற் புதைந்திருந்த கந்தசுவாமி கோயிலைக்கண்டு அதற்குள் புகுந்து, அந்த காரத்தில் தண்டாயுதபாணியாக விருந்த கந்தரை கையால் தேடிப்பணிந்து மிகுந்த அன்போடு ஆலிங்கனஞ்செய்து, கால்களிரண்டையும் உறுதியாய்ப் பிடித்துக்கொண்டு பாவாடமாக விழுந்து இரவு நடுஜாமம் மட்டும் தனக்குத் தெரிந்த ஸ்தோத்திரங்களைச் சொல்லியும், வாயில் வந்தபடி பக்திசிரத்தை வினயத்தோடு கூடிய பதங்களை யுச்சரித்தும் நீயே கதி என்று கிடந்தனன்.

இடி இடித்தாலென ஒரு பெருமுழக்க முண்டாயிற்று. உன் பாதமேகதி என்று உறுதிகொண்ட யான் இச்சல சலப்புக்கு அஞ்சுவேனா என்றனன். உடனே என்றும் கேட்டிராத வாத்திய கோஷமுண்டாயிற்று.

படத்தோடுகூடிய சர்ப்பங்கள் சில இவன் உடலின்பேரில் ஏறி தங்கள் படத்தாலடித்து பயமுறுத்தின. ஏ! சர்ப்பங்களே! ஈசனும் அடியேனும் ஒன்றாயிருப்பதையறிந்தும் அவருக்கு ஆபரணமாகிய நீங்கள் எனக்குமட்டும் வேறாவீர்களோ வென்றனன். உடனே தன்பேரில் வீழுந்தது புஷ்ப்பாரங்களெனவறிந்து மகிழ்ந்தனன். ஒரு கூட்டமான போர்வீரர்கள் விகார ரூபத்துடன், தண்டம், கத்தி முதலிய ஆயுதங்களுடன் தக, சிந்தி, பிந்தி என்று கூறிக்கொண்டு வருவதைக் கண்டனன். ஏ, சிவகணங்களே! ஈசன் வேறு, யான் வேறு என்று எண்ணினீர்களோ? உள்ளங் கவர்ந்தெழுந்தோங்குசினங் காத்துக்கொள்ளுங் குணமே குணமெனபதை மறந்தீர்களோ? சாந்தத்தை எங்கே கைசோரவிட்டீர்கள்? என்றனன் உடனே இவர்கள் வீபூதிருத்திராக்ஷங்களை யணிந்த புண்யாத்மாக்களாய் வேதமந்திரங்களை யுசசரிப்பதைக் கண்டனன்.

இவனுக்கு இவ்விதமாய் எத்தனை நாட்கள் கழிந்ததென்று தெரிய வழியில்லாத போதிலும் மூன்று இரவு கழிந்தது.

நான்காம் நாள் இரவு, பிரகாசிக்கின்ற இரத்தனமயமான தோள்வளை யென்ன, ஹாரங்களென்ன, காதில் அசைகின்ற குண்டலங்களென்ன; தோளில் ஜ்வலிக்கின்ற தோள்பட்டை யென்ன, இடையில்

பொற்பீதாம்பரமென்ன, இவைகளோடு கையில் அழகான சக்தி என்ற ஆயுதத்தை யுடையவராய் சிவந்த மேனியும் புன்சிரிப்புடன் கூடிய முகத்துடன் ஸ்ரீ சுப்பரமண்ணியக் கடவுள் பிரசன்னராய், "ஏ குழந்தாய்! உன் அன்புக்கு மகிழ்ந்தோம். இதோ, இதைக்குடித்து உன் பசியைத் தீர்த்துக் கொள்" என்று சொல்லி ஒரு பொன்பாத்திரத்தில் பாலைக்கொடுத்து குடிக்கச்செய்து, "ஓ மைந்தா! உனக்கு நேரிடும் எவ்வித ஆபத்துகளையும் யாமே நீக்குவோம், நீ எதற்கும் அஞ்சவேண்டியதில்லை" எனறனர்.

நாகமணி.—"ஏ பிரபே! தங்களை இன்னாரென்று அடியேனுக்குத் தெரியக் கருணைபுரிவீர்களா"?

கந்தர்.—"ஏ பால! என்னை இன்னாரென்று அறியவல்லவோ விரும்பினாய்? நீ படித்திருக்கிற திருவிளையாடல் புராணத்திற்கும், பாரத பாகவத இராமாயணத்திற்கும் நாதனும், வேத வேதாந்தங்களுக்கு கர்த்தனும், பவுத்தர்களுக்கு புத்தனும், கிருஸ்துவர்களுக்கு ஏசுநாதனும், மகமதியர்களுக்கு பரபிர்ம்மமும், நாஸ்திகர்களுக்கு சுவபாவ காரணனும், நியாயவாதிகளுக்கு நியாய புருஷனும், சகல ஜீவ சராசரங்களிலும் புறக்கண்களுக்குத் தோற்றாமல் அகக்கண்ணுக்கு தோற்றப்பட்டவனும், பரபிர்ம்மஸ்வரூபியும் யாமே! அவரவர்கள் நினைத்தபடி அவரவர்களுக்குத் தோற்றியருள் செய்பவரும் யாமே. நீ கந்தஸ்வாமி என்று பிரதிஷ்ட்டை செய்யப்பட்ட இவ்வாலயத்திற்கு வந்தபடியால் உனக்கு அவ்வுருவத்தோடு தரிசனங் கொடுத்தோம். உனக்கு இனி வேண்டியதை விரும்பிக் கேட்கில் கொடுக்க சித்தமுறுகின்றோம், கேட்பாயாக," என்றனர்.

நாகமணி.—"ஏ ஈசபுத்திரரே! ஸ்கந்தரே! சேனாபதே, சக்திபாணே, மயூராரூட, புனிந்தாத்மஜா காந்த, பக்தப்பிரியா, உம்முடைய திவ்விய ஸ்வரூபமானது என் மனதில் பதிந்து வேரூன்றி விட்டபடியால், இனி யான் எவ்விடத்திற்குச் சென்றாலும், எப்பொழுது நினைத்தாலும் இந்த ரூபத்துடனேயே தரிசனங் கொடுக்கவேண்டுகிறேன். என் கைகள் உன் காரியத்தையே செய்யவும், என் தலை உன்பாதத்தையே வணங்கவும், என் நாவு உன்னுடைய திவ்விய சரித்திரங்களையே படிக்கவும், என் மனம் உன்னையே நாடிக்கொண்டிருக்கவும் அருள் செய்வாயாக" என்றனன்.

கந்தர்.—"அப்படியே யாகுக" என்று மறைந்தருளினர்.

நாகமணியோ அந்த ஸ்ரீ சுப்பிரமண்ணியருடைய திவ்விய ரூபத்திலேயே தன் மனதை நாட்டியிருந்தபடியால் அந்த ரூபமே எப்பொழுதுமவன் முன்னிருந்தது. அத்திருவருளாலேயே தினப்படி யவரால் கொடுக்கப்பட்ட அமிர்த பானத்தையுட்கொண்டு பிர்மானந்தத்தில் மூழ்கி பிரபஞ்சவாசனையை அடியோடு மறந்திருந்தனன்.

இச்சிறுவனுடைய தாய் தந்தையர்களும் பாடசாலை மாணாக்கர்களும் எழுநாள் வரையில் ஊர்முழுவதும் தேடியும் காணாதவர்களாய் மனந்தளர்ந்திருந்தனர்கள். எட்டாநாள் இச்சிறுவர் கோவிலுக்குளிருந்து வெளியே வரக்கண்ட ஓர் விறகுதலையன் இவரைக்கண்டு கிட்டிச்சென்று, அழைக்க இவர் விரைந்து ஆலயத்திற்குள் பிரவேசித்தார். விறகுதலையன் கோவிலுக்குள் கொஞ்சதூரஞ் சென்று பார்த்து காடாந்தகாரமாய் இரண்டு பயங்கரமாயிருந்த படியால் உட்செல்லத் துணிவுகொள்ளாமல், தான் கண்டகாக்ஷியில் சந்தேகமுற்றவனாயினும் இச்சேதியைப் பலரிடமும் சொல்லப் பின்வாங்கினவனல்லன். சங்கதி நமது சிறுவர் பெற்றோர்களுக்கும் எட்டாமலிருக்கவில்லை.

உடனே தாயும் தந்தையும் சிலரையழைத்துக் கொண்டு விரைந்து சென்று அக்கோவிலுக்குள் இருள் நீங்கும்படி தீவர்த்திகளைக் கொளித்திக்கொண்டு உள்ளே பிரவேசித்த சிறுவர் தண்டாயுதபாணியின் திருவடியில் தலைவைத்துப் படுத்திருப்பதைக் கண்டு வாரியெடுத்து மார்புடனணைத்துக் கொண்டு பாலகனே! நாகமணி! நீதனியே இங்கு வந்து தங்கியிருக்கக் காரணமேது? எட்டு நாளாய் உணவின்றி எப்படியிருந்தாய்? உன்னை இங்கே காப்பாற்றினவர் யார்? என்று கேட்க—

சிறுவர்:—இங்கே ஒரு வேதியர் தினந்தோறும் மதுரமான பால் கொண்டுவந்து கொடுக்க உண்டு பசியாறியிருந்தேனென, தாய்தந்தை முதலியோர் அதிசயித்து, இச்சிறுவனது நற்குணத்தைக்கண்டு ஸ்கந்தரே காப்பாற்றினாரென்று நிச்சயித்து இவரை வீட்டுக்கழைக்கவும், இவர் மாட்டேனென்று மறுக்கவும், பலவிதமான போதனைகள் செய்து அழைத்துக்கொண்டுவந்து வீடு சேர்ந்தனர்.

தாய் தந்தையர்களுக்கும் ஊரிலுள்ள மற்றவர்களுக்கும் இச்சிறுவர் எட்டுநாள் வரையில் கந்தாலயத்திலிருந்து வந்த காரணத்தினால் இவரிடத்தில் மதிப்பு அதிகரித்து வந்ததன்றி, தகப்பனார் இனி நாம் இவனுக்கு வேதாத்தியயனம் செய்விக்கத் தொடங்கினால் எவ்வித இடையூறுகள் நேருமோவென வஞ்சி விதிப்படியாகக் கடவதென்று நிச்சயித்தனர். தவிர இவன் ஸ்ரீ சுப்பிரமண்ணியம்சமென்று எண்ணக் காரணமிருந்ததினாலும், இவனுக்கு அதற்குத்தகுந்த விதமாய் நாமதேயமமைந்திருந்ததினாலும், இவன் ஸ்ரீ சுப்பிரமண்ணியக் கடவுளாலேயே எட்டுநாள் வரையில் காப்பாற்றப்பட்டபடியாலும், தகப்பனார் இவனுடைய பக்தியை உன்னி ஆநந்தக்கடலில் மூழ்கியிருந்தனர். தாயோ இவன் தனக்கு ஏக புத்திரனாதலால், இவனும்

விரக்தியடைந்து முன்போல எங்கேயாவது போய் விட்டால் என்ன செய்வதென்று மனக்கலக்கமுடையவளாய், இவனுக்கு விவாகஞ் செய்துவிட்டால் நல மென்பதாக தன் கணவரிடத்தில் அடிக்கடி சொல்லிவந்தாள். அப்படியே தகப்பனாரும் ஒரு தக்க கன்னிகையை விசாரித்து மண முடித்தனர்.

நாகமணியோ தானன்றுகண்ட பகவத்ஸ்வரூபத்திலேயே நாட்டமுள்ளவனாய் ஸ்ரீ சுப்பிரமண்ணிய ஸ்மரணையே மேலிட்டு பிரபஞ்சப்பற்று முழுவது மற்றிருக்கக்கண்ட தாய் தந்தையர்கள் ஸ்ரீ கந்தமாதன பர்வதத்தில் ஜயந்திபுரமென்னும் க்ஷேத்திரத்தையடைந்து ஸ்ரீ சுப்பிரமண்ணிய மூர்த்தியின் பக்தர்களாய் அவரடியைமறவாமல் கீர்த்தனங்கள், ஸ்தோத்திரங்கள். அஷ்டகங்கள் முதலியவை செய்து பாடிக்கொண்டும், பக்தி செய்துக்கொண்டுங் காலங்கழித்தனர். தாய் தந்தையர்களுக்கு விருத்தாப்பியமேலிட்டபிறகும் நாகமணியாதொருதொழிலிலும் பிரவேசிக்காமலிருந்தபடியால் குடும்பசம்ரக்ஷணத்திற்கு கஷ்டமுண்டாயிற்று. இவர்கள் ஜயந்திபுரம் சென்ற பிறகு அவ்வூர் வாசிகளுக்கு இவரிடத்தில் விசேஷ அன்பும் ஆர்வமும் பெருகும் படியாய் இவரால் கொடுக்கப்பட்ட விபூதியானது, ஸ்ரீசுப்பிரமண்ணியருடைய கிருபையால் அபஸ்மாரம், க்ஷயம், ஜ்வரம், உன்மாதம் முதலிய பலவ்யாதிகளை சௌக்கியப்படுத்திற்று. இவரோ இதற்காக ஒரு பைசாவும்கூட விரும்புவதில்லை. இதையறிந்த சிலவியாபாரிகள் இவரை நோக்கி, ஐயா நீர் யாதொரு தொழிலுஞ் செய்யாமலும், பலர் இஷ்டப்பட்டு கொடுக்கிற தொகையை வேண்டாமென்றுமறுத்தும் வந்தால் உம்முடைய குடும்பசம்ரக்ஷணம் எப்படி நடக்கும், இதுவரை உமது தந்தை நடத்திவந்ததை நீரல்லவோ இனி நடத்தவேண்டும். ஏதோ இருந்தவிடத்தை விட்டு நகராமலும், உமது பக்தி விஷயமான காரியசதிற்கு தடையில்லாமலும் ஒரு வர்த்தகஞ் செய்து குடும்பசம்ரக்ஷணத்தை சுலபமாய் நடத்தலாமே, அதற்கு பணமில்லையென்பீராயின் நாங்கள் ஐநூறு ரூபாய் தருகிறோம். அதைக்கொண்டு வஸ்திரவியாபாரஞ்செய்து கிடைக்கும் இலாபத்தை குடும்பச்செலவு செய்துகொண்டு சுகமாயிரும். முதலை எங்களுக்கு வேண்டும்போது கொடுக்கலாமென்றார்கள்.

அவர்கள் கூறுவதற்கு இவர் கோஞ்சம் சம்மதித்தவுடனே, இவருக்காக தங்கள் கடைக்கு சமீபத்தில் ஒரு கடையமைத்துக்கொடுத்து வஸ்திர வியாபாரிகள் பரிபாஷையையும் தந்திரங்களையும் கற்பித்து, நாலுபேர் விற்கும் விலையையும் அறிவித்து, வர்த்தகம் செய்பவர் பொய் சொல்லாவிட்டால் சொற்ப இலாபந்தானுண்டாகு மென்பன போன்றவற்றையும் போதித்தார்கள்.

இவைகளைக்கேட்ட நாகமணி, அவர்களை நோக்கி நீங்கள் சொன்னபடியே செய்கிறேன். ஆனால் என் தலைபோனாலும் பொய் சொல்லமாட்டேன். சொல்ல நினைக்கவுமாட்டேன். பொய் சொல்லிச் செய்யும் வர்த்தகத்தால் வரும் ஊதியம் அற்பமானாலும் என் குடும்பசம்ரக்ஷணத்திற்கு போதுமானதென்று சொல்லுதலும், அவர்கள் இவர் சொன்னதைக் கேட்டு நகைத்து, இவர் நமது சொல்லை கேட்கவுமாட்டார், தானாகத் தெரிந்துக்கொள்ளவுமாட்டார், இவருக்கு நாம் சொல்வது வீணென்று சொல்லவும், அவர்களிலொருவர் மற்றவர்களைப்பார்த்து, இவர் முன்பின் வர்த்தகஞ் செய்தவரல்லவாகையால் இப்படிக் கூறுகிறார்; நம்மோடு கூடி வர்த்தகஞ் செய்வதில் கொஞ்சநாள் பழகுவாரானால் பொய் சொல்லுதல் முதலிய விஷயங்களில் நமக்கு குருவாய்விடுவாரென்று சொல்ல, கேட்ட மற்றவர்கள், ஆம்! ஆம்!, அது சரிதான் என்று ஒத்துக்கொண்டு இவரை வியாபாரத்திலமைத்துவைத்தார்கள்.

அன்றுமுதல் இவர் இவ்வர்த்தகத்தைத் தொடங்கி தம்மிடத்தில் துணிவாங்க வருவேர்களுக்கு எங்கள் அசல் இவ்வளவென்றும், அதற்குமேல் இலாபம் இவ்வளவென்றும், இஷ்டமிருந்தால் வாங்கிக் கொள்ளலாம், இஷ்டமில்லாத பக்ஷத்தில் வேறு கடையில் வாங்கிக்கொள்ளலாமென்று சொல்லி, சம்மதித்து வாங்குகிறவர்களுக்கு மாத்திரம் விற்று, கிடைத்த இலாபத்தினால் காலக்ஷேபஞ் செய்துக் கொண்டு ஸ்ரீதண்டாயுதபாணி ஸ்மரணையை மறவாமலிருந்தார்.

இப்படி நடந்து வருவதால் துணிவாங்க வருகிறவர்களெல்லாம் இவர் பொய் சொல்ல மாட்டாரெனவறிந்து, அவர் சொல்லும் விலையைக்கொடுத்து வாங்கிக்கொண்டு போவதால் இவருக்கு ஊதியமதிகரித்து மற்றவர்களுக்குக் குறைந்தது. ஆகவே மற்ற கடைக்காரர்கள் இவர் விஷயத்தில் பொறாமைகொண்டு, இவருக்கு எவ்விதத்தில் தீங்கு செய்யலாமென்று யோசனைசெய்து தாங்கள் கொடுத்த முதலைக் கேட்கவே, இவர் அத்தொகையைக் கொடுத்துவிட்டு, தமது வியாபாரத்தில் குறைவின்றி நடத்தி வந்தனர். பொறாமை மேலிட்ட வியாபாரிகள் ஒருநாள் தங்கள் கடைகளுக்கு எதிரிலிருந்த ஆலயத்திலுட்கார்ந்து கவனித்துப் பார்க்கையில் இவர் கடையொன்றில் மாத்திரம் விசேஷ வர்த்தகம் நடந்ததால் இவரை எவ்விதத்தில் கெடுக்கலாமென்று யோஜனை செய்து ஒன்றும் தோற்றாமல் அதே கவலையாயிருந்தார்கள்.

கார்த்திகை மாதத்து கடைசி சோமவாரம் வந்தது. பக்த கோடிகள் பலர் ஸ்ரீ சுப்பிரமண்ணியராலயத்திற்கு தம்பூறு, மிருதங்கம், வீணை முதலிய வாத்தியக் கருவிகளுடன் கூட்டங் கூட்டமாகச் செல்வதைக்கண்ட நமது நாகமணி சர்மாவும் செல்லக்கருதி பக்கத்துக் கடைக்காரர்களிடம் தாம் வருகிற வரையில் கடையைப் பார்த்துக் கொண்டிருக்கும்படி கேட்க, அவர்கள், போ! போ! பொருள் கொடுத்து உனக்கு கடைவைத்து கொடுத்தது

மனறி உன் கடையைப் பார்த்துக்கொள்ளவும் நாங்கள் உன் வேலைக்காரர்களோ, உன் இஷ்டப்படி போ, கடையிலுள்ள பொருள்களுக்கு நாங்கள் ஜவாப்தாரிகளல்லவென்று கூற, இவர் வேறு சில கடைக்காரர்களைக் கேட்க அவர்களும் அப்படியே சொல்ல, கேட்ட பக்தர் துணிகள் போனலென்ன? இருந்தாலென்ன? என்று சொல்லிவிட்டு கடையை மூடிப் பூட்டிட்டு—முருகர் திருவடியை நினைத்து ஸ்தோத்திரஞ் செய்துக்கொண்டே ஆலயத்திற்குச் சென்று அவ்விடத்தில் நடக்கிற அந்திகால பூஜை அர்த்தஜாம பூஜை முதலியவைகளைக் கண்டு களித்து பக்தர்கள் செய்யும் பஜனையில் புத்தியை செலுத்தினவராய் ஆநந்தத்தில் முழுகியிருந்தார்.

இவர் இங்கு இவ்வாறிருக்கையில் பொருமையினல் பிடிக்கப்பட்ட வர்த்தகர்கள் இவருடைய கடையின் பூட்டை உடைத்து உள்ளே பிரவேசித்து துணி முதலியவைகளை கொள்ளையிட்டு ஒரு குளத்தில் போட்டு அமிழ்த்தி அவருடைய குதிரையையும் ஓட்டிவிட்டு, மருந்தில்லாமல் பிணி நீங்கிற்றென்று, இவரை தூஷித்துக்கொண்டிருந்தார்கள்.

* * * *

இவர் ஆலயத்தில் இரவு மூன்றுமணி வரையில் ஆநந்தமாய்க்கழித்து திரும்பி வருகையில் வழியில் ஒரு ஆள் இவருடைய குதிரையைப் பிடித்துக்கொண்டு நிற்பதைக்கண்டு யாரென்று கேட்க, நின்றவர் குதிரையை விட்டு மறைந்தனர். குதிரையைப் பிடித்துக்கொண்டு தம் கடையை நோக்கிவரவே பக்கத்துக் கடைக்காரர்கள் ஆறுபேர் கண்களில் நீர் ததுபப வந்து, இவர் பாதங்களில் விழுந்து தாங்கள் இரவில் இவருக்குச் செய்த தீங்கையும் தங்களுக்கு தெய்வாதீனமாய் நேர்ந்த ஆபத்தையும் சொல்லி யழுது முறையோவென்று கதறினர்கள்.

இவர் அவர்களை சமாதானப் படுத்தி, அவர்களால் தமக்கு செய்யப்பட்ட குற்றத்தை மன்னித்துக் காப்பாற்றுவதாக உறுதிமொழி கூறி சங்கதியை விசாரிக்க, தாங்கள் இவருடைய கடையில் பிரவேசித்து துணி முதலியவைகளை கொள்ளையடித்துக் குளத்தில் விட்டதையும் குதிரையை யவிழ்த்து ஓட்டியதையும், சற்றுநேரத்திற்கெல்லாம் தங்கள் கடைகளில் பல திருடர்கள் புகுந்து கொள்ளையிட்டதன்றி, தங்களைத் திருடர்கள் நன்ருய்ப் புடைத்ததையும் கூறி தங்கள் உடலிலுள்ள காயங்களையும் காட்டினர்கள்,

நாகமணி இவைகளெல்லாம் ஸ்ரீ சுப்பிரமண்ணியருடைய திருவிளையாட்டென்பதாக வுன்னி, இவர்கள் விஷயத்தில் அதிக கருணை கொண்டு தமது துணிகளையெல்லாம் குளத்திலிருந்து எடுக்கச்செய்து அவர்களுக்குப் பங்கிட்டுக்கொடுத்து, கடவுளுடைய கருணையை எண்ணி யெண்ணி மகிழ்ந்து, வியாபாரத்தை விட்டு, அவ்வர்த்தகர்கள் இவர் மகிமைக்காக வியாபாரத்தில் ஏற்படுத்திய மகிமை என்ற தொகையைக்கொண்டு குடும்ப சம்ரக்ஷணமும் அதிதிபூஜையும் செய்துக்கொண்டு வந்தனர்,

இவர் இப்படியே சில நாளிருந்து ஒருநாள் ஸ்ரீ சுப்பிரமண்ணியருடைய சந்நதியில் பலவிதமான ஸ்தோத்திரங்களை சொல்லிக்கொண்டு வரும்பொழுது, மெய்சிலர்க்க கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக இவருடைய ஆத்மாவானது திவ்விய ஜோதியாய் வெளிப்பட்டு சென்றதை இன்னும் அந்த க்ஷேத்திரவாசிகள் சொல்லிக் கொள்ளுகிருர்கள்.

இவ்விதமாகவன்றே கடவுளிடத்தில் பூர்ணமான பக்தி செய்யவேண்டும்.

---

கடைசியாக ஒரு வார்த்தை.—

ஐரோப்பியராகிய ஒரு கனவான் தான் இருபது வருஷகாலம் அதிக பயபக்தியுடன் ஒரு அரசரிடத்தில் மந்திரித் தொழிலியற்றி வந்தபிறகு அவ்வரசர் நன்றி பாராட்டாமல் கடிந்து தம் தேசத்தைவிட்டு வேறு புகலிடந்தேடிக்கொள்ளச் சொன்னபொழுது (Wolsey) என்றவர் சொல்லியதாவது.—

Had I but served my God, with
half the zeal,
I served my King, he would
not in mine age,
Have left me naked to mine
enemies.

அதாவது.— நான் எவ்வளவு பயபக்தி விஸ்வாசத்துடன் என்னுடைய அரசனை சேவித்தேனே அதில் பாதி பயபக்தி விஸ்வாசத்துடனவது கடவுளை சேவித்திருப்பேனுனல் அவர் என்னை தள்ளாத காலத்தில் என்னுடைய விரோதிகளுக்கிடையில் அனுதரவு செய்திருக்க மாட்டாரென்று சொன்னர்.

ஓம் த்தஸத்.

T. C. வெங்கடரமணையர்.